உ

பெருமாள் துணை.

# தமிழறி ... மாள்

# அம்மானை.

[illegible]

இஃது

சிவகங்கை ஜமீன் திருப்பத்தூர் தாலூக்கா

கண் ... ரிக்சம் ஸ்ரீமது ம-௱-௱-ஸ்ரீ

செ. ... ராயணஞ்செட்டியாரவர்கள்

... வண்டிகோவின்பேரில்

சி ... கங்கையில் வசிக்கும்

... டந்தாலூகா, முடுக்கங்குளம்

ம-௱-௱-ஸ்ரீ

ராமசாமி நாயகர்

குமாரர்

அரங்கசாமிநாயகரியற்றியது.




சென்னை:

கலாரத்நாகரம் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1906.

# சா ற் ள்.

மேம்பத்தூர் சங்கவித்வான்களி லொருவராகிய

ம-ா-ா-ஸ்ரீ,

முத்துவேங்கடசுப்பய்யரென்று பேர்விளங்கிய

சிலேடைப்புலி பிச்சுவையரவர்களியற்றிய

நேரிசைவெண்பா.

ஆங்கத்தமிழ் ந்ரிபெருமாள் காதையினைப்
பங்கமிலம் மாண்யதாய்ப் பாடினன்—றுங்கமிகுஞ்
சத்துக்கள் போற்றரங்க சாமியெனும் நாவலவன்
வித்துக்கள் கொண்டா டவே.

---

மற்படியாரா லியற்றிய

௭ சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பார்மேவு தலையனந்த னஞ்சுதலை யடைந்துநிற்கப்
பனிபோற் பாவை
சீர்மேவு மங்கமல முறக்குளிர்சந் தனவரையன்
சிந்தை யோர்ந்தேன்
தார்மேவு புயவரங்க சாமிசிந்தை யறிந்திலன்யான்
றக்க தென்ன
ஏர்மேவு தமிழறியும் பெருமாளம் மானையினை
யிசைத்தான் மன்னே.

---

இஃது
சிவகங்கை மகாரா... ஹைஸ்கூல்
தமிழ்த்தலைவ... ராகிய பிரான்மலை
ம-ா-ா-ஸ்ரீ,

## தெய்வசிகாமணி அய்யரியற்றிய

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சீர்பூத்த சிவகங்கை செழித்தோங்க வரந்தருநற்
செயலான் மேன்மைப்
பேர்பூத்த கௌரிவிநா யகனடியி னிலைப்பூசை
பெரிது செய்வோன்
நார்பூத்த நாரணனே பரமெனக்கொ... டொழுகுதவ
நலத்தா னென்றுங்
கார்பூத்த திருமேனி யரங்கசா மிப்பெயர்கொள்
கனவான் மன்னே. (க)

தமிழறியும் பெருமாளின் சரிதமதம் மனைப்பாவாற்
சமைத்தான் தேவர்
அமிழ்தினுமே வினியதிது வெனவவை... ...கையமின்...
வ்வமுத மோங்கி
யுமிழ்திரைநீ ரலையுதித்துப் புலவர்மட்டு முணத்தகுதி
யுடையதிஃ தோ
இமிழ்நிகர்த்த முலைப்பூமா னிடைப்புலவர் தாமுமுண்
சிறந்த தாமால். [ணச்

---

இஃது சிவகங்கை
ம-ா-ா-ஸ்ரீ

## செ. க. அ. ரு. முத்துகிருஷ்ணபிள்ளை

அவர்களாலியற்றிய திரிபு.

தருவரங்கந் தருவர்மிகச் சார்ந்துலவத் தனித்தசரோ
ருகத்தாட் கென்றும்

மருவரங்க மாவதியும் வரநதியின் வழுத்தினன்றாய் வயிற்றின் மேதுங்
கருவரங்க வருபெ[illegible] தயினையம் மானையெனக் கனிவு கூர்ந்து
திருவரங்க சாமியெனுஞ் சீதரன்றாட் செழுமலருட் சேர்த்தி னானே.

---

சிவகங்கை

ம-ா-ா-ஸ்ரீ

## ஆ. தி. காத்தய்யா பிள்ளையவர்களா

லியற்றிய யமகம்.

திருக்கோட்டிப் புகழ்பூண்டத்துக் கலைஞரஞ்சச் செயம்நாட்டுந் தெரிவைதபி ழறிவாளமுத்
திருக்கோட்டிப் பழமறையாய்ந் திடுவோன் றிறங்காட்டி விறகுவிற்கச் சென்றாய
திருக்கோட்டி யவள்மமதை கெடுத்துமீண்ட திருக்கதையம் மானையதாய்ச் செப்பினனித்
திருக்கோட்டிப் பரனடியைக் காறும்போற்றித் திகழரங்க சாமிகவிச் சிம்மவேறே.

---

இஃது சிவகங்கை

ம-ா-ா-ஸ்ரீ

## செ. க. ரா. ம. நாராயணபிள்ளை

அவர்களாலியற்றிய

**நேரிசைவெண்பா.**

சக்கங்கா மன்னோர் தமிழ்தேர் பெருமாள்முன்
றக்கங்கொண் டேபின் சுகமடைந்த—வக்கதையைத்
தாரணியுந் தோழரங்க சாமியம்மா னைப்பாவாய்த்
தாரணினின் றேற்றவறைந் தான்.

---

இ ஃ

பே ரிய

**அறுசீர்க்க. ..யவிருத்தம்.**

சீர்பூத்த தமிழறியும் பெருமாளின் றிருக்காதை
சிறப்புற் றோங்கப்
பார்பூத்த பாப்பழகும் பாவாணர் பழந்தேன்பால்
பாகோ வென்னக்
கார்பூத்த கயல்விழிசேர் கலைமகளுந் தலைதுளக்கக்
கனிவோ டன்பாய்
ஏர்பூத்த வெமதரங்க சாமியம்மா னேப்பாவிங்
கிசைத்தான் மன்னோ.

---

சிவகங்கை

ம - ா - ா - ஸ்ரீ

## முகம்மதிஸ்மால்ராவுத்த ரவர்களால்

இயற்றியது.



**அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.**

வானிருக்கு மதிவதனம் வண்டிருக்கு மலர்க்கூந்தல்
வனமார் வஞ்சி
தானிருக்கு நூலிடைநற் றமிழறியும் பெருமாள்தன்
சரிதை யெல்லாந்
தேனிருக்கு தெனப்புலவோர் செப்பிடவம் மானையைச்செந்
தமிழாற் காம
தேனிருக்குஞ் செழுங்கரத்தான் றிகழரங்க சாமிசொற்றான்
சிறப்பாய் மன்னோ.

---

சிவகங்ள ... ரட

அ. ரு. சுந்த ... பவர்கள்

குமா

## வெண்ணிமலை பிள்ளையவர்களியற்றிய

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தடமிகுங்க ணெடுமடைக்குட் சினந்து தாவித்
தண்பணைமேற் பாய்ந்துகளை யெடுக்குந் தாம
வடமுலையார் கலைக்காலோ டெதிர்த்து மோதி
மதர்த்துலவுந் திரண்டவரால் வாவி சூழ்ந்த
புடவிபுக ழுறையூரிற் கலாபீ டத்திற்
பொருந்துதமி ழறிபெருமாள் புகழைச் செய்யாள்
நடமிடுநற் சிவகங்கை யரங்க சாமி
நாயகனம் மானையென நவின்றான் மாதோ.

---

இஃது சிவகங்கை
மா-ா-ா-ஸ்ரீ
மு. பஞ்சாக்ஷரம்பிள்ளையவர்கள்
குமாரர்

## கணபதியாபிள்ளை யியற்றியது.



### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வண்டடர்பூங் குழன்மடவார் மயலே வாய்ந்து
மடல்வரையும் வடிவழகன் வயங்கு வாசத்
தண்டமிழ்தேர் வலனரங்க சாமி யோகன்
றமிழறியும் பெருமாளின் சரிதந் தன்னைப்
பண்டுமறை நாலுணர்பா வலர்கள் மெச்சப்
பகர்ந்தனனம் மானையெனப் பாரின் மீதே
கண்டொடுமுக் கனியோதேன் பாகோ வெல்லக்
கட்டியோ வெதையுவமை கழறு வோமால்.

---

இஃது
சிவகங்கை
ரா. ம. தம்[illegible] நாயகரவர்கள்
குமாரர்
## நரசிம்ம நாயகரவர்க ளியற்றியது.



வெண்பா.

திங்கள்மரபான் றிருவரங்க சாமியெனுந்
துங்கன் றமிழறிவா டொல்கதையை—யிங்கிதஞ்சேர்
அம்மானைப் பாவா யறைந்தா னமுதமென
இம்மா நிலம்புகழ வே.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கருமுகிலைப் பொருகுழலார் கலவியினித் தெறிகலன்பொற்
காந்தி தன்னால்
மருமலிகற் பகநகரொன் றமராறுறை சிவகங்கை
மருவி வாழுந்
தருநிகர்செங் கரதலமா லரங்கசா மிக்கவிஞன்
றமிழிற் கும்பன்
திருவளர்நற் றமிழறிவாள் சீர்கதையம் மானையெனச்
செப்பி னானால்.

---

இஃது
இராமநாதபுரம் ம-ா-ா-ஸ்ரீ
பெ. லெ. நாராயணராசவர்கள்
குமாரர்
## காளிதாசராசவர்களியற்றிய

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

நந்திடைபொன் மேருதனத் தமிழறியும் பெருமாளின்
சரிதந் தன்னைச்
சிந்திடையிற் றுயிலமர்ந்த சிதரன்பொன் னடியிணையிற்
சிந்தை யோவா

வுந்திடைநற் றிருவரங்க சாமியம்மா னைப்பாவா
யுரைத்தான் பொன்னென்
றந்திடையி லகப்பட்ட சாலிமெ ருல
கடைந்தா ரன்றே.

---

இஃது சிவகங்கை சமஸ்தான வித்வான்
ம-ா-ா-ஸ்ரீ

## வில்லியப்பபிள்ளையவர்களியற்றிய

### அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இசைவளருந் தமிழறியும் பெருமாள்காதை யினைத்தமிழ்
வெண்டுறைப்பாவா யியற்றுமென்ன
நசையுணர் வேண்டற்பொருட்டு மிகவாராய்ந்து நவரசஞ்
சொற்சுவையொடு கற்பனைகடோன்ற
வசைதவிர் தாட்டாந்த திருட்டாந்தத்தோடு வண்புலவர்
மனங்களிக்க வகுத்துச்சொன்னான்
சசிதவழ் சுற்றிலகுசிவ கங்கைமேவும் சற்குணவுத்
தமனரங்கசாமி மாதோ.

---

இஃது சிவகங்கை
ம-ா-ா-ஸ்ரீ

## செ. க. சுப்பிரமணியபிள்ளையவர்கள்

### இயற்றிய திரிபு.

தருக்கவிக்குந் தனிக்குடைக்கீழ் தங்குவியா ழப்புத்தேட்
டரத்தோர் தம்மை
யுருக்கவிக்கும் பழந்தேனென் பெனமதுர கவியுரைப்போ
ருளத்தி னேங்குந்
செருக்கவிக்கு மம்மானைச் செழும்பாவிற் றிகழரங்க
சாமி செஞ்சொற்
றிருக்கவிக்குஞ் சரமுவந்து முத்தமிழ்மும் மதம்பொழிந்து
சிறந்த தன்றே.

---

கண்டுப்பட்டியிலிருக்கும்
சிவகங்கை
ம-௱-௱-ஸ்ரீ
க. ரு. முத்தணன் சேருவையவர்கள்
குமாரர்
முத்துராக்கு சேருவையவர்களியற்றிய
எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பூவதனிற் றமிழறியும் பெருமாளென்னும் பூவைசரித்
    திரமதனைப் புலவோர் யாரும்
நாவமுதஞ் செவியமுத மாமீதென்று நவிலச்செந்
    தமிழாலம் மானை யென்னும்
பாவணியாச் சொற்றுறனல் சிவகங்கைப்பால்
    பகருயிர்மெய் முதற்றந்த வொருத்தனற்றாள்
மேவரங்கில் வாழரங்க சாமியென்னும் வித்வசிகாமணி
    நமதுவிதி தன் மன்னே.

---

நாட்டரசங்கோட்டை ம-௱-௱-ஸ்ரீ
நாராயணன்செட்டியாரவர்கள் குமாரர்
ஐயாக்கருப்பஞ்செட்டியார்
இயற்றிய
அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பூவுலகிற் றமிழறியும் பெருமாளென் றுறைபூவைப்
    புகழும் மானைப்
பாவதனை மால்ராம சாமிமுகில் பாடிடெனப்
    பகர்ந்திட் டானல்
காவளமுந் தனவளமுங் கலைவளமு நிறைந்தசிவ
    கங்கை மேவும்
நாவலனு நல்லரங்க சாமிநா யகன்புவிக்கு
    நயமாய் மன்னே.

---

## பாயிரம்.

### பெருமாள்துதி.

செருக்கோட்டி பங்கரா விடத்துழலுந் துயர்தீர்த்துத்
தேனைப் பஞ்ச
வருக்கோட்டி யவர்களிடர் தீர்த்தானு மடியானை
வருத்துங் காமக்
கருக்கோட்டி பிடித்தலையா தெந்நாளுந் துயரகற்றுங்
கருணை யானுந்
திருக்கோட்டிப் பெருமானென் னுவிருந்திந் நான்முடி
செய்வர் தாமே. [யச்

### விநாயகர்துதி.

மும்மதத்தா னைங்கரத்தா னெம்மதத்துக் கும்முரியான்
முக்க ணீசன்
றம்மனத்துக் குரியசுதன் சேந்தனுக்கு முன்னோன்
றன்னை நீங்கா
தெம்மனத்து ளிருத்தியிந்தக் காதையையம் மானையதா
யிசைத்தேன் சோள
வம்மனுளத் ததிபிரியைத் தமிழறிவாள் பெருமைவெளி
யாக மாதோ.

### இலக்குமிதுதி.

கலித்துறை.

பூமலிந் தோங்கும் கடல்சூழுலகிற் பொருந்து தமிழ்ப்
பாமலி யும்பெரு மாளினம் மானையைப் பாடுதற்குத்
தேமலி யுஞ்செய்ய தாமரை யாள்செஞ் சரணமதை
யேமலி யுள்ளத் திருத்தியிப் பாட லியம்பினேனே.

### சரஸ்வதிதுதி.

மருப்பொதிந்த குழலாள்செந் தமிழ்மாதின் சரிதைமதை
மண்ணு ளோர்கள்
விருப்பதிக மாய்க்கேட்க வம்மானைப் பாவாக
விளம்ப வென்று
விருப்பவள்வெண் ணிறத்தாய்வெண் கமலத்தா ளெனக்கருள்
வித்திந் நூலைத் [செய்

திருப்புகழென் றதிசயிக்க முடிப்பவனின் றுளிணையைச்
 சென்னி சேர்ப்பாம். (௪)

சங்கையிலாச் சமையபுரம் வகுப்பதனிற் றுமனாமா
 ரிஷிகோத்ரந் தன்னில்வந்தோன்
மங்களஞ்சேர் சிவகங்கை மாநகரின் வணிகர்குல
 நாகரத்ன மகிபனின்ற
துங்கன்வயி ரவன்செட்டி முயற்சியினுற் றொல்கதையம்
 மாணையதாய்ச் சொல்வீரென்று
திங்கள்வத னன்ராம நாதன்செட்டி செப்பிடவம்
 மாணையதாய்ச் செய்தேன்மாதோ. (உ)

## கந்தவேடுதி.

வந்து முன்னவன் வாரண மாய்ப்பயந்
தந்து வந்தெயினர் தந்த நாசுழல்
சுந்த ரக்குயந் தொட்டவன் செந்தில்வாழ்
கந்த வேள்பொற் கழலிணை போற்றுவாம்.

## சிவபெருமான்துதி.

வெண்ணி யம்பல மேவும் புயாசலக்
கண்ணி யன்றலைக் கங்கையன் கைதனில்
திண்ணி யம்மழு வேந்திய சிற்பரன்
புண்ணி யன்கழற் போதைப் பணிகுவாம்.

## அம்பிகைதுதி.

சிந்து ரத்திலதஞ் செய்ய வாயிதழ்
சுந்த ரப்பவ ளத்துண்டஞ் சோர்குழல்
கந்த ரங்கரு வண்டுக ளுழமை
எந்த னுள்ளத் திருப்பளெக் காலுமே.

## நம்மாழ்வார்துதி.

### வெண்பா.

வேதந்தமிழ்செய்த வித்தகன்மெய் யன்பருக்கு
நாதன் பரமபத நாடுடையான்—சூதுடைய
நாரியரினுசை நசித்தோன் குருகையர் கோன்
காரிமா றன்கழல் காப்பாம்.

# நூல்வரலாறு.



சீர்மலியுஞ்சோலைவளஞ் சேர்ந்தசிவகங்கையிறை
தார்மலியும்புயத்தான் சங்கநிதிபோற்கரத்தான்
பாவாணருக்குப் பசியாதமுதளிப்போன்
பூவாணர்கப்பமொடு போற்றும்மணிக்கழலான்
மருவலர்சிம்மேறனையான் மாநிதியிலேதனதன்
அருமறையோர்க்கெப்பொருளு மன்போடளிக்கும்வ
கீர்த்திமிகுந்த கெவுரிவலவேந்தர்துரை [ள்ளல்
பார்த்திபன்சேது பதிமகிழும்ராசதுங்கன்
திருக்கோட்டிசேது திருக்கானைநற்காசி
செருக்கோட்டுங்கூடற் றிருமாலிருஞ்சோலை
பூவனஞ்செந்தி புரிசையுயர்புல்லாணி
மாவளஞ்சேரும்பழனி மாநாகையுங்குடந்தை
மலையாளசீரங்கம் மன்னுதிருப்பதியும்
அலைசூழ்திருப்புத்தூ ரண்ணல்திருவாடானை
திருப்பரங்குன்றமுயர் சீர்காளிகாஞ்சிபுரங்
கருப்பமுறுதன்பளிக்குங் கண்ணபுரந்தஞ்சைமுதல்
இன்னமனேகமதா யெங்குமுளதலங்கள்
தன்னிலெப்போதும்பூசை தானடக்கச்செய்துசிவ
கங்கைக்கரையிற் கவுரிவிநாயகனைச்
சிங்காரமான சிலாவிக்கிரகமதாய்
வைத்ததற்குப்பூசை வழங்கும்படியாகச்
சித்தர்புகழ்மா சிவனேந்தலையீய்ந்தோன்
நகரமதிலிருந்து நானுரைத்தேனிக்கதையை
இகமதனிலுள்ளோ ரெல்லோருங்கேட்டருள்வீர்.

---

ஸ்ரீ

ஸ்ரீராமஜயம்.

# தமிழறியும்பெருமாளம்மானை.



தாரணியோர்போற்றுந் தமிழறிவாடன்கதையைச்
சீரணியம்மானையெனச் செந்தமிழிற்செப்புதற்கு 1

தவறிலாவாக்கதனைத் தந்தெந்நாளுமுதவுங்
கவரிவிநாயகரின் கஞ்சமலர்த்தாடுணையே 2

செருக்கோட்டித்தீவினையைத் தேய்த்துப்பரமுதவுந்
திருக்கோட்டிநாரணன்றன் செம்பொற்பதங்காப்பாம் 3

சங்கமருங்கையாள் றனிமார்பில்வீற்றிருக்குஞ்
செங்கமலமாதின் றிருவடியையான்மறவேன் 4

குஞ்சமதிநஞ்சரவங் கொஞ்சுகங்கைவஞ்சியுறுஞ்
செஞ்சடைச்சதாசிவனார் செங்கமலத்தாடுணையே 5

நம்புமடியார்களுக்கெந் நாளுமருள்புரியும்
அம்பிகையின்பாக மனுதினமுயான்மறவேன் 6

வள்ளிமயிலொடுந்தெய் வானைமயிலைமருவித்
துள்ளுமயிலேறிவருஞ் சுப்ரமண்யன்றுணையே 7

பாணியுறும்வெண்ணிறத்துப் பங்கயப்பூமேலிருக்கும்
வாணியெந்தனுவில் வசித்துநல்லவாக்கருள்வாள் 8

பெருகுதமிழறியும் பெருமாள்கதையதனைக்
கருதறியபாகக் கவிஞோர்முன்யானுரைத்தல் 9

வானிலுயர்கொம்பிலுறு மாங்கனியைக்காலிலியுந்
தான்பறித்துக்கொள்ளத் தலைப்படுவதொப்பாகும் 10

அன்னநடைகண் டதற்கிணையாகக்காகந்
தன்னடையைக்காட்டித் தனைமேனடந்ததொக்கும்
பேதைதமிழறியும் பெருமாள்கதையதனைச்
சீதக்கடலுலகிற் செப்புமம்மானையெனக் 12
கவிவேந்தரையுமுலகாளும் வேந்தாக்குவிப்போன்
புவிவேந்தர்நாளும் புகழும்நிதியுடையான் 13
கோகனகமாது குலவுந்திருமுகத்தான்
மாகனகக்குயியல் வளரும்மனையிடத்தான் 14
வள்ளலெழுவர் மதிக்குங்கொடைக்கரத்தான்
வள்ளிகணவன் மலர்த்தாள்மறவாதான் 15
மணிகொள்கடல்சூழு மண்ணுலகமாமதனில்
வணிகர்குலந்தழைக்க வந்தமணிவிளக்கு 16
வண்டமிழையறியும் வள்ளலெனமுத்ததனைத்
தெண்டிரைக்கையாற் றெளிக்குநதிசூழ்ந்த 17
கண்டமாணிக்கமெனக் கழறுந்திருநகரான்
வண்டறையுமாலை மருவும்மணிப்புயத்தான் 18
மன்னர்புகழும் மால்ராமசாமிவள்ளல்
கன்னிதமிழறியும் பெருமாள்கதையதனை 19
அம்மானைப்பாவா யமையுமெனவுரைக்க
இம்மாநிலத்தி லெல்லோர்களுமறிய 20
நாடுபுகழ்ராம நாதபுரஞ்சீமை
மாடமுயர்பள்ளி மடந்தாலுகாவதனில் 21
வில்வபுரஞ்செல்வ மிகுந்தகல்யாணபுரம்
நல்வளஞ்சேர்மணவை நகராங்குபேரபுரம் 22
செங்கெந்போராதவன்றன் றேரைமறித்துநிற்கும்
அன்னப்பெடைக ளடைகாக்குஞ்சங்கின்முத்தை 23

வாழைமஞ்சள்கன்னல் மலியும்வயலிடத்துத்
தாழைமகரந்தந் தனைக்கொட்டுகிறதுபோற் 24
பாதிரிநெல்லிதென்னை பக்கமெலாம்நெருங்கி
ஆதவன்றன்வெப்ப மணுவுமில்லாதிருக்கும் 25
பூமலிநந்தனங்கள் பொருந்துமிடங்கள்தொறும்
சேமம்நிறைமனையிற் செந்திருவேவசிப்பாள் 26
முத்தமிழோர்நிறைந்த முடுக்கங்குளத்திருக்கும்
நற்றவத்தோன்சுப்பா நாயகன்புத்ரனென 27
வந்திவ்வுலகுதித்த மால்ராமசாமிமுகில்
தந்தசுதனரங்க சாமியெனுநாவலவன் 28
செப்பினேனம்மானை சிறந்தகதையதனை
இப்புவியிற்கவிஞ ரிதயம்பொறுத்தருள்வீர். 29

நாட்டுச்சிறப்பு.

தேனுறுபாய்ந்துவளர் செந்நெல்முகிலைத்தழுவும்
மேனுடுசென்றரம்பை மென்கவரிபோலசையும் 30
கன்னல்வளர்ந்து கதிரோன்றனைமூடும்
மன்னுமிஞ்சிமஞ்சள் வயலைவளஞ்செய்துநிற்கும் 31
கொங்குநறுஞ்செங்கழுநீர் கோகனகமிவையைக்
கங்குல்நிகருங்குழலார் களையென்றெடுப்பார்கள் 32
கண்டுமொழிப்பள்ளியர்தங் கண்கள்சலத்திற்றோன்றக்
கெண்டையென்றேபிடிக்கக் கீழேதடவுவராம் 33
குடித்தவெறியாலுழவர் கொண்டமின்னார்தங்களிடம்
அடித்துச்சரசவிளை யாட்டிலகங்களிப்பார் 34
சங்கீன்றமுத்தைத் தனிப்பறவையாங்குருகு
அங்கசன்றன்முட்டையென வடுத்தடையிற்காத்திருக்கும் 35
பூமாதெந்நாளும் பொருந்துகின்றநாடதனிற்
றேமாங்கிளையிலெங்குஞ் செழிக்குங்குயிலோசை 36

எடுத்துக்கரும்பிரச மெங்குமின்னூர்காய்ச்சுதலால்
அடுத்தபுகைமுகிலென் றூடும்மயிலினங்கள் 37
பள்ளியர்கள்தன்னடையைப் பார்த்துத்தமதுநடை
எள்ளளவுமொவ்வாதென்றேகுமன்னப்பட்சியினம் 38
எந்தவளநாடு மிதற்கிணையாகாதெனவே
அந்தமலிந்த அருணமாந்தேசமதிற் 39

## நகரச்சிறப்பு.

சத்தியலோகந் தனதனளகாபுரியும்
எத்திசைக்குமேலா யிருக்குமமராபதியும் 40
உரைக்கிலிதற்குநிக ரொவ்வாதொருநகரும்
கரைக்குட்பெருமை தங்குமளகாபுரியாம் 41
அந்தநகரின்வளமறிந்த மட்டும்யானுரைப்பேன்
செந்திருவங்கேவசிக்குஞ்செய்யமணிக்கோபுரமும் 42
பாடகசாலைகளும் பந்தடிக்குமேடைகளும்
ஆடல்புரியு மழகானமண்டபமும் 43
வச்சிரத்தாற்சுவர்கள் வைத்திருக்குமாளிகையும்
உச்சிதமானவுயர் பளிங்குச்சாலைகளும் 44
சந்திரகாந்தத்தாற் சமைந்தமணிமாடிகளும்
சுந்தரஞ்சேர்பவளத் தூண்கணட்டசாவடியும் 45
முத்துச்சரங்கண் முகப்பிலிட்டவீடுகளும்
எத்திசையுங்கொடிகளிட்ட மேன்மாடிகளும் 46
கூட்டமுடன்முத்தமிழோர் கூடும்பெருஞ்சபையும்
தேட்டமுடன்றர்க்கஞ் செய்வோர்பெருங்குழுவும் 47
வேதம்பயிலுகின்ற வேதியர்வீதிகளும்
சாதிவணிகர்தழைக்கும் பெருந்தெருவும் 48
மேழிபிடிக்கின்ற வேளாளர்வீதிகளும்
பாழியந்தோள்நாயகர் பதித்தமணிமேடைகளும்

சத்துருசங்காரரெனுஞ் சத்திரியர்வீதிகளும்
தத்துபரிமகவான் தன்குலத்திலேயுதித்த 50
ஆசாரங்கல்விமிகு மகம்படியார்வீதிகளும்
பூசாவிதிகள் பொருந்துமடவாலயமும் 51
பணத்துக்கரைப்பணத்தை பகரல்செய்வோர்வீதிகளும்
குணத்தின்மிகுதுலுக்கர் குடியிருக்கும்வீதிகளும் 52
மாலின்வயிறெனவே மன்னுங்கடைவீதி
சேலையொத்தமால்விழியார் திரண்டிருக்குமாநகரம்
கரவிந்தம்போற்கருத்த கயம்நிறைந்தவாவிகளும்
அரவிந்தமங்கைய ணீராடும்படித்துறையும் 54
மாரனோர்மைந்தர் மயிலன்னமங்கையர்கள்
நேரடர்ந்தெங்கும் நிறைந்தமலர்ப்பொழிலும் 55
சன்னல்வழிதோன்றுஞ் சந்திரனைத்தங்களுடைக்
கன்னியென்றுடைவர்கள் கையாற்றடவுவராம் 56
தெங்கிளங்காய்பறித்த் தேர்மாவின்றண்டமிதியாற்
பங்கமுடனுடைந்து பக்கத்திற்சேருகும் 57
மாடக்கொடியண்ட மதிளுக்குமேலிருக்கும்
சேடன்முடிமேற் றிகழுமகிற்கிடங்கு 58
மருக்கொழுந்துபிச்சி மல்லிகைசெவந்திமுதல்
இருக்கும்பலநந்தனமு மிரப்பவர்க்கெந்நாளும் 59
கொடுக்குமன்னசத்திரமுங் கொண்டவதுமாடிகளில்
அடுக்குஞ்சிறப்பும் யானைகட்டுமண்டபமும் 60
பஞ்சலட்சணமுள்ள பரிகணிறைபந்திகளும்
கஞ்சநிறைவாவிகளுங் கடவுளர்தமாலயமும் 61
கேசரியன்னமைந்தர் கெருடிபழகிடமும்
தேசமன்னர்வசிக்குஞ் சிறந்தவிடுதிகளும் 62

இன்னமநேகவளா மாயிருக்குமந்நகர்க்கு
மன்னனனேகசன் வரைநிகருந்திண்புயத்தான் 63

தெவ்வேந்தர்தம்மைச் சிரமரியும்வாள்வேந்தன்
எவ்வேந்தரும்வந் திறைஞ்சும்மணிக்கழலான் 64

பங்கையரெங்நாளும் மடலூர்வடிவழகன்
சங்கையிலாக்கவிஞர் தரிக்குந்தனிச்சபையான் 65

கப்பமொடுமன்னர் காத்திருக்கும்வாசலினன்
தப்புமொழியெப்போதுஞ் சாராதநாவுடையான் 66

தஞ்சமென்றோரைத் தப்பாமலெப்போதும்
அஞ்சலெனக்காக்கு மருணிறைந்தநன்மதியான் 67

அன்னமன்னன்கருத்துக் கமைந்தமதியமைச்சன்
சொன்னமனுவின் கருதிமுடிவாயுணர்வோன் 68

ஆயிரநாவுடைய வாதிசேடன்றனக்கும்
பாயிருளைநீக்கும் பரிதிதனக்குமேலோன் 69

மருக்கமழுந்தாரான் மதியூகியாமமைச்சன்
திருத்தமுடனரசு செய்துவருநாளில், 70

## எலங்குழலிவர்ணிப்பு.

அன்னமன்னுக்கோர்பெண்ணவள்பேரேலங்குழலாள்
சின்னவிடையாளழகைச் செப்பவெவராலாகும் 71

பந்தையவள்குதிக்குப் பகர்வேனதுசிறிய
மைந்தரின்கையடியால் வருந்துவதால்நேராகா 72

ஆமைபுறவடியென் பேனுனதுநீரில்
தாமரைதலாலதனைத் தானுரைத்தால்தப்பாகும் 73

பரட்டுக்குமுன்புலவோர் பகர்ந்தார்தராசதனைப்
பிரட்டல்லாலவ்வுவமை பேசவுந்தாளொவ்வாது 74

பெண்ணரசியின்கணைக்காற் பெரியவராலென்றுமிம்
மண்ணிலுளோரென்னை வசையுரைக்கமாட்டாரோ

அலவன்முழந்தாளென் றறைவேனதுவளையில்
தலைபுகுத்தோடுவதால் தாமுரைத்தல்தப்பாகும் 76
துடையையிளவாழைகரித் துதிக்கையெனலாமதுவும்
புடைவையணிந்துமலி பொற்புமவைகட்கிலையே 77
அரசிலையராவின்பை யவளல்குலென்றுரைத்தால்
உரகமிலையிரண்டுக் கொழிக்குங்குணமிலையே 78
தந்துந்துடியுமவ டன்னிடையென்பேனுகில்
சொந்தமனையாட்குச் சோரமனையொப்பெனவாம் 79
வடவாலிலையை வயிறென்றுரைப்பேனுகில்
தடமாங்கருப்பந் தரிக்குஞ்செயலிலையே 80
நீர்ச்சுழியுந்திச்சுழியை நிகர்க்குமெனவுரைத்தால்
பார்க்குளுளகவிஞர் பங்கமிலையென்பாரே 81
மதனுணவள்வயிற்றின் மயிரொழுங்கென்பேனுகில்
கதஞ்செய்வாரேயவர்க்குக்காரணமியாதுசொல்வேன்
மாகனவெற்பு மதயானைக்கொம்புதிருக்
கோகனகமிளநீர் கோங்கரும்புதாளமிவை 83
சுந்தரஞ்சேர்புற்புதத்தைச் சொல்வேன்தனமாக
சந்தனமாலைதரிக்கி லவைகள்நிகராம் 84
ஏத்துகின்றகாமுகர்மே லின்பவேள்முத்திரையைச்
சாத்துகின்றதென்னத் தழுவும்மணிவிரலாள் 85
நகத்தைக்கிளிமூக்காய் நானுரைப்பேனுமாகில்
இகத்திலுளோரதற் கிணங்காரொருநாளும் 86
கண்டுமொழிமின்னாள் கனத்தகொங்கைக்கருப்பு [ம்
துண்டாமனைமுகைமேற் றுணிருந்தவண்டையொக்கு
பண்ணுறும்யாழைப் பகர்வேன்முன்கையெனவே
எண்ணுறுமேழுநரம் பேயுமதுநேராகா 88

வேலைத்தோளென்று விளம்புவேனவ்வேயுள்
ளாயும்பாசாண மிருப்பதினாலொப்பாகா 89
கூடிப்புள்ளோசை கொடுக்குங்கழுத்தினுக்குத்
தேடிக்கமுகையிணை செப்புதலுங்குற்றமன்றோ 90
வண்டுதுளையா மனையொன்றிருக்குமென்றால்
கெண்டைவிழிமுகத்துக் கிணையென்றுரைத்திடலாம்
நாதுளைமாதுளையைத் தொண்டைக்கனிகளிதை
மாதிதழுக்குவமை வழுத்திலமுதூறுதே 92
முத்துமுருந்துமுரு குறுமுல்லைமுகையுஞ்
சித்திரஞ்சேர்காவியுறில் சேயிழையின்பன்னிகர்க்கும்
ஓவியமாதுமொழிக் குயிர்பெற்றிரங்குமென்றால்
மேவுமுலகில் வேறுவமையாதுரைப்பேன் 94
மாதுகபோலமதை மன்னுகண்ணாடியென்பேன்
கோதுரசமதனிற் கூடுவதானோராகா 95
மானனையாள்மூக்கென் மலரொன்றுரைத்தாலும்
ஆநிறையுமுல்லைநிலத் தாதவனுற்றன்கருகும் 96
ஒத்திருக்குங்காதை யுரைக்கலாம்வள்ளையெனச்
சத்தமுளமாணிக்கத் தோடணிந்தாலொப்பாகும் 97
வாள்வேல்பிணைமா வடுசேல்குவளைகஞ்சங்
காளம்வலையம்பு கடல்நீரிவைமுதலாய் 98
இத்தனையும்கண்கட் கிணையென்றுரைத்தவர்பின்
அத்தனைக்குங் குற்றமவரேசொல்வாராகும் 99
மாதுவிழிக்கு மாறுபொருளோதுரைப்பேன்
ஓதரியமின்னுள் ஒளிசேர்புருவமதை 100
காமன்வளைக்குங் கரும்புவில்லென்றேயுரைப்பேன்
சேமக்கறுமையுறில் திரண்டபுருவமொப்பாம் 101

வானிற்குழவிமதியை நுதலென்றுரைப்பேன்
தேனிற்குமான்மதத் தின்றிலதமதற்கிலையே 102
தேசுபுனைபங்கயமேற் சேர்ந்தவண்டின்றிரளை
மூசுமுகிலையறலை மோதுகடல்சைவலத்தை 103
கற்பகக்காவைக்கொன்றைக் காயைகாயாமலரை
அற்புதஞ்சேருமிரவை யவள்கூந்தலுக்குவமை 104
மன்னுமெனவுரைத்தால் மாணிக்கக்கல்லினுக்குச்
சின்னமுறும்பரலைச் செப்புவதையொப்பாகும் 105
மாதுரியமங்கை வடிவழகுதான்படைக்கச்
சாதுரியவேதனென்ன தவஞ்செய்தானோவறியேன்.

## கதையின்வரலாறு.

மாந்தளிரன்னமேனி மாதுள்சகிகளுடன்
சேர்ந்துமணிமாடஞ் சித்திரப்பாவையென 107
மணிமேகலையிறுக்கி வாரிக்குழல்முடித்துப்
பணிகடிருத்திரண்டு பந்துரத்தின்மேலிருக்க 108
காந்தள்மலர்க்கையாலக் காரிகையோர்பந்தெடுத்து
ஆர்ந்தமதிமுகத்தா ளடித்துவிளையாடிநின்றாள் 109
இப்படியாக விவளிருக்கும்வேளைதனிற்
செப்புவேனின்னமொரு செய்திதனையம்மானை 110
பாடலிபுரமென்றும் பட்டணத்தையாளுகின்ற
தோடவிழ்பூந்தாரான் சுகுணகுணகம்பீரன் 111
பச்சைமயிலோனை நிகர்பத்ரகிரியாம்நாமன்
செச்சையணிமார்பன் சேய்சந்தனகுமரன் 112
என்னுமைந்தனையரச னெழுத்தறிந்தோதுதற்கு
பன்னூல்கல்விச்சாலை படிக்கவைத்தான்மைந்தனையும்
தேசிலுயர்மைந்தன் சிறிதுமுணராமல்
மாசுற்றமூட மதியாயிருப்பவனைத் 114

தந்தைசினந்து தனையன்றனக்குரைப்பான்
பந்தவினையாலெனக்குப் பாலகனாய்வந்தாயே 115
தொட்டனைத்தூறு மணற்கேணிமாந்தருக்கு
கற்றனைத்தூறு மறிவென்றுவள்ளுவனார் 116
செப்புங்கலையை சிறிதுமுணராமல்
ஒப்பிணையில்லா வொளிசேர்வனத்தமர்ந்த 117
மரம்போலிருக்குமுனை மதிப்பாரோவையகத்தில்
தரமில்லாபிள்ளைபெற்ற தந்தைதனக்கென்னசுகம் 118
உனைப்போல்மதியில்லா ரொருவரிலையிவ்வுலகில்
எனைப்போலதிட்டமிலா னில்லையினிமுகத்தில் 119
விழிக்காதேயென்றரசன் வெறுத்தான்சிறுவனையும்
மொழிகட்கெதிர்மொழிக ளொன்றுமுரையாமல் 120
நடந்தான்நகரைவிட்டு நல்வேந்தன்புத்திரனும்
கடந்தான்வெகுதூரங் கண்டானளகைபுரி 121
புகுந்தந்நகரின் புதுமைதனைப்பார்த்துத்
தகுந்தநகரின் றலைவனெவனோவறியேன் 122
என்றுநினைந்திவனு மேகும்வழியிலொரு
குன்றுபோலேநிவந்து கொண்டலுறுமாடியின்மேல்

### இராசகுமாரன் இராசகுமாரத்தியைக் காணுதல்.

ஆலங்குழலா ரனேகர்புடைசூழ
ஏலங்குழல்பந் தெடுத்துவிளையாடுவதைக் 124
கண்டானரசன் கனகச்சிலையதுபோல்
வண்டார்குழலிந்த மாதாரெனமயங்கி 125
தாராகணநடுவிற் றுனுதித்தசந்திரனோ
சிராப்பதியுதித்த தேவிகமலாசனியோ 126
கலையிலுயர்கமலையோ மதனன்கன்னிகையோ
மலையத்துவசன் வரோதயசிரோமணியோ 127

இந்திரைமேனகையோ ஏர்நாககன்னிகையோ
சிந்திக்கிலிவ்வரசன் சேயிவளோதானறியேன் 128

என்றுபலவிதமா யெண்ணியேமன்மகனும்
நின்றானப்பெண்ணி னிலாமணிநன்மாடியின்கீழ் 129

கொஞ்சுங்கிளிமொழியாள் கோடிமதனன்போல
மிஞ்சுமழகுள்ள வேந்தனைக்கீழேபார்த்தாள் 130

தாரணியுமார்பன் தனையரசன்புத்திரனோ
வாரணிகொங்கையிரதி மகிழ்நனோவல்லவெனில்

கந்தருவனோநாக கன்னியர்கடாமனையும்
மைந்தனோயிந்திரனோ, வானவன்வித்யாதரனோ 132

ஆரோயிவனென்னறியே கொள்ளைகொள்ளவந்த
சோரனோவென்று துவண்டவிடையாள்மயங்கி 133

வளையுங்கழன்றிடையில் வளைத்தகலையுஞ்சோர்ந்து
களையுங்குலைந்துநின்ற கன்னியர்கள்காணாமல் 134

## இராசகுமாரனுக்கு இராசகன்னிகை ஓலையெழுதல்.

காதோலையின்னகத்தாற் கன்னிவரைந்ததுவை
ஏதோயறிந்தமட்டு மியம்புவேனம்மானை 135

கண்ணோட்டமானுங்கர்க் கடுத்தமேற்பாரிசத்தில்
மண்ணோட்டமென்னு மடமொய்திருக்குதில் 136

தானங்குசென்று தனித்திருப்பிராமாகில்
நானங்குவாரேனின் றிராத்திரிக்கென்றேயெழுதி 137

போட்டாளம்மாது புவிவேந்தன்முன்னாக
நாட்டரசனெடுக்க நாரியுஞ்சைகையினால் 138

மேற்கேகைகாட்ட விரைந்தரசன்றானடந்து
தீர்க்கமுளமடத்திற் சென்றானதிலொருவன் 139

## இராசகுமாரன் மடத்தில் முடவனைக்காணுதல்.

கைகால்குறைந்து கனத்தவிரலழுகி
மெய்யிலான்மேனி விழுந்தீக்கள்தான்மோத 140
சுண்ணமெனக்கண்ணில் சொரியும்பீளைசெறிய
மண்ணுவானந்த மடத்திற்படுத்திருந்தான் 141
இருந்தவனையிந்த இறைவன்மகன்பார்த்து
திருந்தும்வாசிப்புத் தெரியுமோசொல்லுமென, 142
அறிவேனென்றான்முடவ னப்போதிவன்முடங்கல்
செறியுமெழுத்தின்பொருளைச் செப்புமெனவுரைக்க
கொடுத்தசுருள்வாங்கிக் கொண்டுமுடவனதில்
அடுத்தபொருளை யவனுக்குரையாமல் 144
மணியராவாயிரையில் மண்டூகம்வாய்வைத்ததுபோல்
பிணிசெய்நரிவாயிரையில் பெண்முயல்வாய்வைத்ததுபோல்
கிளர்பூனைவாயிரைக்கு கிளிதானிச்சித்ததுபோல்
வளர்கீரிவாயிரையில் மாசுணம்வாய்வைத்ததுபோல்
செவ்வேங்கையினிரைக்கு செந்நாயிச்சித்ததுபோல்
கொவ்வையிதழாளைக் கூடுவதற்கிச்சைவைத்து 147
தோடவிழ்தாருடைய துரைமகனைப்பார்த்துரைப்பான்
மாடமுயரிந்த மணிநகரையாளரசன் 148
மூடன்பகுத்தறிவில்லா முரடனுந்தனையும்
தேடிப்பிடித்துச் சிரச்சேதம்செய்யுமென்று 149
கொலையாளர்க்குத்தரவு கொடுத்தாளும்மன்னவனும்
மலைபோற்றனத்தா ளம்மன்னவன்புத்திரியும் 150
அந்தரகசியத்தை யாயிழையுந் தானறிந்து
இந்நகரைவிட் டேகுமென்றேயெழுதி 151

இருக்குதெனவே யியம்பினான்துரோகியவன்
கருத்துமயங்கிமிகக் காவலன்புத்திரனும் 152

தெய்வமேயென்று திகைத்துமுகம்வாடி
பெய்வளையாள்என்மேற் பிரியம்வைத்தாளெனவே

சிந்தைகளித்ததற்குத் தெய்வச்செயலிதுவோ
இந்தவினைதா னெனக்குவரக்காரணமேன் 154

மின்னுதிருக்கிலிடி வீழ்ந்தகதைபோலாச்சே
என்னாற்கெடுதி யிவற்குச்செயவிலையே 155

ஏதுவாய்வேத னெழுதினதும்மிதுவோ
மாதுமேலிச்சையான்வைத்ததுமிவ்வினைக்கோ 156

என்றுபலவிதமா யெண்ணிநன்மன்மகனும்
சென்றான்வடக்குத் திசையதனைத்தானோக்கி 157

## முடவன் சரீரசுத்திசெய்தல்.

மடத்திலிருந்த மடையன்முடவனுந்தான்
திடத்துடனேயவனுஞ் சிந்தைதெளிந்தெழுந்து 158

தேமலமுகிதனைச் சேருமுடம்பைக்கழுவ
வாமமுறும்நீர்நிறைந்த வாவிதனக்கேக 159

கந்தத்துணியெடுத்துக் காலில்வரிந்திறுக்கி
நந்துவலக்கையால் நல்லதடிக்கம்பூன்றி 160

வந்துகுளத்தில் வடபாலிருந்தவனுஞ்
சிந்துஞ்சீயைக்கழுவத் தேங்காய்சிரட்டையினால் 161

உராசியுராசியவ னுள்ளசடெல்லாம்போக்கித்
திரையாய்த்திரண்டதொரு சீத்துணியெலாங்கசக்கி

தேகத்தையத்துணியாற் றேய்த்துக்கரையேறி
வேகத்துடனேவந்து வீழ்ந்தான்மடமதனில் 163

## இராசகுமாரத்தி இராசகுமாரனைத்தேடி மடத்திற்கு வருதல்.

இந்தப்படியா யிருந்தான்முடவனங்கே
கந்தமலர்க்குழலாள் காவிநிகர்கண்ணுடையாள் 164
மாதன்றிரவு வருவதெதிர்பார்த்துப்
போதுசென்றபோதவளும் போய்த்தன்சலக்கமதில்
பன்னீரால்ஸ்நானமிகப் பண்ணிக்குழல்வார்ந்து
பின்னிமலர்சூடிப் பிறைசேர்நுதற்கிணங்க 166
கட்டிஞள்கட்டி கதிரோனுதித்ததுபோல்
வெட்டிலுயிர்கவரும் வேலைநிகர்கண்களுக்கு 167
மையிட்டுநெற்றிதனில் வைத்தாள்திலதமொன்று
கையிட்டுவால்வளைகள் கண்டசரமணிந்து 168
சடைக்குச்சிஞேடு சடைநாகந்தான்புனைந்து
உடைமைபலவணிந்தே ஒப்பில்லாமூக்கதனில் 169
முழுவயிரத்தாலமைந்த மூக்குத்திதானணிந்து
செழுமைதருமணியாற் செய்தபுலாக்கணிந்து 170
மதிக்கமுடியா வயிரங்களால்நயமாய்ச்
செதிக்கினகம்மலுயர் சேயிழையுங்காதிலிட்டாள் 171
ஆடகமணிக்குழையை ஆரணங்கன்ஞெரித்து
பூடணத்திஞல்மாது பூகந்தனைமறைத்தாள் 172
சுணங்குபடர்ந்த துணைமுலைக்குக்கச்சணிந்து
அணங்கன்ஞள்முன்கைக் கணிந்தாள்சரியதனை 173
வச்சிரக்கல்மோதிரத்தை மாதுநல்லாளெடுத்து
இச்சைதரும்விரலில் இட்டாள்காணம்மானை 174
ஆடவர்நெஞ்சைச்சுழல்போ லாட்டும்பதங்களுக்கு
பாடகந்தன்னைடைகொலுசு பாதசரமணிந்து 175

இலையோவுண்டோவெனவே யெண்ணுமிடைதனக்குக்
கலைகள்தனிலுயர்ந்த காஸ்மீரப்பட்டுடுத்தி 176
சந்தனம்பன்னீர் சவாதுபுனுகுவில்லை
கந்தரமன்னகுழற் காரிகையாள்தானெடுத்து 177
சேர்த்துவழித்துச் செப்பதனிலேயடைத்து
பார்த்திபன்மைந்தன் பசிதணியவுண்பதற்கு 178
கோதுமையில்வந்த குறுநொய்தனைத்திருத்தி
ஏதுவாய்மங்கை யெடுத்தாவினெய்யிலதை 179
சேர்த்துமதுரமுள்ள சீனியதிற்கலந்து
பார்த்தடுப்பில்வைத்துப் பதத்திலிறக்கிநல்ல 180
தேன்போல்மொழியாளுந் தேனிற்பிசைந்தெடுத்துத்
தான்சேருமன்னனுக்குத் தாகவிடாய்தீர 181
பாலெடுத்துமின்றுளோர் பாத்திரத்திற்றான்வார்த்துச்
சேலெடுத்தமால்விழிமின் சேர்த்தபலகாரமுடன் 182
கட்டுவர்க்கஞ்சோடி கலந்தகந்தத்திரளும்
இட்டமுள்ளமைந்தனிடைக்குத்தங்கக்கொடியும் 183
காதுக்கிசைந்த கற்கடுக்கன்மோதிரமும்
மாதுரியமன்னன்றன் மார்புக்கிடப்பதக்கம் 184
இன்னமநேக மெடுத்துந்தக்கன்னிகையும்
பின்னமில்லாமற் பெரியதங்தப்பெட்டிதனில் 185
எல்லாஞ்சரியா யெடுத்துவைத்துப்பூட்டி
நல்லாள்தன்தாதியிலோர் நங்கைதனையழைத்து 186
எந்தனுயிருக்கிணையா ளென்றன்னிடத்திற்
சொந்தரகசியத்தைச்சொல்லத்துணிந்தேன்யான் 187
ஆர்க்குமிதனை யறிவிப்பதில்லையென்று
தீர்க்கமுடனெனக்குச் செப்புவாயாமாகில் 188

நானுரைப்பேனென்ற நாயகிதனைப்பார்த்துத்
தானறியாப்பேயாட்டுத் தானுண்டோவையகத்தில்
வானறியப்பூமிமாதறிய வுந்திருவின்
கோனறியயான்பிறற்குக் கூறுவதேயில்லையென்றாள்
தாதியுரைத்த தனிமொழியைத்தான்கேட்டு
நீதியுளாயின்று நிலாமணிமாடியின்மேற் 191
பந்தடிக்கும்போதோர் பார்த்திபனையான்பார்த்துச்
சிந்தைகலங்கிமிகச் சித்தசனெய்யம்பதனால் 192
வாடும்பொழுதிலந்த மன்னனெனைப்பார்த்தான்
நாடுமரசனுக்கு நானெழுதினேனோலை 193
எழுத்தின்விபர மியம்புவேன்கேளெனவே
வழுத்துவாளந்தமுள மாதுதன்தோழியர்க்கு 194
மன்னவனேயிந்த மாநகர்க்குமேற்புறத்தில்
மன்னும்மண்ணோட்ட மடத்திலிருமின்றிரவு 195
வாரேனெனவே வரைந்தேனம்மன்னனுக்குக்
காரோதியேயவர்போய்க் காத்திருப்பாராதலினால்
நாம்போவோம்வாவெனவே நாயகியாள்தானுரைக்கக்
காம்புநிகர்தோளாளக் கன்னிகையுஞ்சம்மதித்தாள்
பெட்டியெடுத்துப் பெண்ணின்றலையில்வைத்துக்
கட்டுநூலேணிதனிற் காரிகையார்தாமிறங்கிக் 198
கோட்டைகடந்துநல்ல கோமகளுந்தாதியுமாய்
ஓட்டைமடந்தேடி யோவியங்கள்போனடந்தார் 199
சுந்தரப்பாதந் துலங்குசிலம்பின்சோதி
சந்தமலர்க்கைவளையிற் காந்துமொளியிரண்டும் 200
பாதைவழிகாட்டப் பாவையர்கள்தானடந்து
காதுதல்செய்கூற்றின் களம்புகுவார்போலுமந்த 201

மாதுநல்லார்வந்து மடத்திற்புகுந்தார்கள்
கோதுவருமென்று குறியாதிருவருமாய்ப் 202
புகுந்தங்குபார்த்துப் புரவலனைக்காணுமல்
வெகுதுன்பமாகிவிறல் வேந்தன்மகள்காலாலே 203
தடவும்போதங்கே தனித்தொருவன் மூலைதனிற்
படுத்தங்கிருப்பவனைப் பைந்தொடியாள்தான்பார்த்து
இன்றுயான்கண்ட இறைவன்மகனிவனு
மென்றுநினைந்தாளே ஏலங்குழலணங்கு 205

இராசகன்னிகை முடவனைத்தழுவி உயிர்விட்டது.

நிதியுங்கணவனுமே நேர்படினுந்தம்மது
விதியின்பயனேயலால் வேறுளதோவுலகில் 206
காந்தையிவள்காமக் கடலதனிலேவீழ்ந்து
பாந்தமுளானென்று பற்றிஞள்கையதனுல் 207
பலவின்கனியின்முட்போற் பட்டதவன்மெய்ச்சொறி
கலையினுட்சீநாற்றங் காரிகையுந்தானுணர்ந்து [யும்
கான்கண்டகானற் கயற்போலிருந்ததுவே
நான்கண்டராசநல்ல நாமிருந்தாலினிமேல் 209
மன்னற்குரிய மகளெனுஞ்சொற்பெருமை
கன்னிப்பெருமையுமே கட்டழிந்துபோச்சுதினி 210
இருந்தாலுலகத் திகழ்ச்சிக்கிடமாகும்
வருந்துன்பமென்றுயிரை மன்னன்மகளும்விட்டாள்
தண்டாமரைமுகத்தாள் தன்னுயிர்தான்போய்விழவே
கண்டாளிறந்ததனைக் காரிகையாள்தோழிமிக 212
அய்யோயிதென்ன அநியாயமன்மகளின்
மெய்யையுயிரிழந்து விட்டதென்னகாரணமோ 213

மாடத்திலரசன்மகன் வந்திருக்கிறானவன்றன்
இடத்திலெனக்கிச்சை யிருக்குதென்றுசொல்லிவந்த
மாதுமடிந்தவகை யொன்றுந்தோணவில்லை
ஏதுவாய்ப்பூத மிவளையடித்ததுவோ 215
வரும்போதிரவில் வல்லரவுதீண்டினதோ
அரும்பேய்களாலே யவதியுந்தானுண்டாச்சோ 216
பூவாழரசன் புதல்வனென வெண்ணியிந்தச்
சாவான்முடவன்றனைத் தழுவினேனினிமேல் 217
இருப்பதழகல்ல எனநினைந்தேகினையோ
மருப்பொதிந்தகூந்தல் மயிலேமரகதமே 218
மானேயெனக்கிசைந்த மாணிக்கரத்தினமே
தேனேகனியேநீ தேகம்விட்டுச்சென்றாயோ 219
அய்யோயிதனை யரசனறிந்தாலென்
செய்வானோவென்று திகைத்துமுகம்வாடி 220
கைகால்நடுங்கிக் கரியகுழல்சோர்ந்து
தையலாள்கண்ணீர் ததும்பிவழிந்தோட 221
பாராளுமன்னனுக்கு பைங்கொடியாள்கொண்டுவந்த
சீராகுந்தேங்கனியுஞ் செய்தபலகாரமுடன் 222
கட்டுவர்க்கங்கந்தம் கலன்களிவையனைத்தும்
கொட்டியப்பெட்டிதனிற் கோதைதனையுள்ளடக்கி
தலைமீதெடுத்தந்தத் தையல்வழிகூடி
மலையாதவள்நடந்து வந்தங்கரண்மனையில் 224
மஞ்சத்தின்மீதுறவே மங்கைதனைக்கிடத்தி
வஞ்சிவிடிந்தபின்பு மன்னனிடத்தோடி 225

### தாதி இராசனிடத்தில் முறையிடுதல்.

அடித்துவிழுந்தங்கே அய்யோவெனவலறி
துடிக்குங்கொடியன்ன தோகைதனைப்பார்த்து 226

பாங்கியேநீயும் பரதவித்தகாரணத்தை
ஈங்குசொல்வாயென் றிசைத்தானரசனுமே 227
அப்போதவளு மழுகைதனையும்விட்டு
செப்புமொழிகுழறி சேயிழையுந்தானுரைப்பாள் 228
சாப்பிட்டிரவதனிற் றாம்பூலமுந்தரித்து
காப்பிட்டகையாள் கனகமஞ்சமீதினிலே 229
நித்திரையுஞ்செய்தாள் நிருபனேயானுமங்கோர்
சித்திரமஞ்சமதிற் சென்றுபடுத்திருந்தேன் 230
பொழுதுவிடிந்தவுடன் போனேனவளருகிற்
பழுதில்லாமங்கை படுத்திருப்பதைப்பார்த்து 231
மையிட்டகண்ணாள் மலரணையின்மீதேறி
கைகொட்டினேனதற்குக் கன்னிவிழிக்கவில்லை 232
மூக்கிற்கைவைத்தேன்யான் மூச்சுவராமைகண்டேன்
நாக்கினுள்ளீரமதைநான்பார்த்தேனென்றுமில்லை 233
வேந்தனேயென்று விழுந்தாள்தரைமீது
சாந்தமுளதாதி தானுரைத்தவார்த்தையது 234
நாராசங்காச்சி நடுச்செவியில்விட்டதுபோற்
பாராசன்ரத்னம் பதித்தசிம்மாசனத்தில் 235
சாய்ந்தான்மூர்ச்சையானான் தற்போதமில்லாமல்
ஆய்ந்தமதியுள்ள அமைச்சனரசைத்தேற்றி 236
தெள்ளமுதன்னாள் செய்யதோர்மாளிகைக்கு
வள்ளலிறையுமவன் மந்திரிமாரெல்லோரும் 237
வந்தந்தமங்கையுட மாளிகையிலேபுகுந்து
அந்தமுளமாதி னந்தப்புரமதற்கு 238
எல்லோருநிற்க இறைவனொருவனுமாய்
வல்லமருங்கொங்கை வல்லிமஞ்சத்தருகில் 239

தார்வேந்தன் சென்றிடவுந் தாதிமாரெல்லோருந்
தேர்வேந்தேநாங்களென்ன செய்வோமெனவலறி 240
விழுந்தார்களந்தமுள வேந்தன்றிருவடியில்
அழுந்திவிசாரத்தா லரசன்மகளைப்பார்த்து 241
கண்ணேமணியேயான் காதலுடனேவளர்த்த
பெண்ணேயென்மீது பிரியம்விட்டுச்சென்றாயோ 242
பூலோகவாசையினிப் போதுமெனநினைந்து
மேலோகத்தின்சுகத்தை மேவுதற்குச்சென்றாயோ
சந்திரன்ரோகணியுந் தாரகைவண்டோதரியும்
இந்திரன்தேவி இரதிமுதலானோர்நின் 244
காலழகுக்குநிகர் காணாரேகண்மணியே
தாலமதையாளுந் தார்வேந்தர்புத்திரற்கு 245
பாகமணமுடித்து யானும்மழகையுமன்
பாகக்கண்ணூற்பாராப் பாவியுமோயானேனே 246
தவத்தாலுனையீன்ற தந்தைதாயைமறந்து
பவத்தைவிட்டுத்தேவ பதிபார்க்கச்சென்றாயோ 247
என்னுடையவுத்திரவொன் றில்லாமலேதனியாய்
உன்னுடையபுத்தியினா லோடினதென்னாயமெனை 248
தந்தைவருந்தித் தவிக்கிறரென்றெனது
சிந்தைமகிழத் திரும்பிவரலாகாதோ 249
எனக்குரியதேச மெனதுமணியேயுன்
றனக்குரியநாயகற்குத் தானரசுசெய்துவைத்துப் 250
பார்க்கநினைத்தவெண்ணம் பாழாய்முடிந்ததுவே
தீர்க்கமனமுஞ் சிறந்தகல்விச்சிறப்பும் 251
அடக்கம்பெருமை யறமுந்தைரியமும்
மடக்கொடியேநிறைந்த மானேயுனையினியான் 252

எக்காலங்கண்டென் னிதயங்களித்திடுவேன்
மைக்கோலக்கண்ணே வனக்கிளியேயென்றரசன் 253
ஆராத்துயரா லழுதுபுலம்புவதை
சீரானமந்திரிமார் தேர்வேந்தன்புத்திரியின் 254

## மந்திரிகளரசனைத்தேற்றுதல்.

மஞ்சத்தைச்சூழ வளையுந்திரையையென
கஞ்சமலர்க்கழலின் காவலன்பாற்சென்றுரைப்பார்
ஆண்டாண்டுதோறு மழுதுபுரண்டாலும்
மாண்டார்வருவரோ மாநிலத்தின்மன்னவனே 256
மின்னிமறையுமுயர் மின்போன்றயாக்கையிது
நன்னேநினைந்து சலிப்பாரோவையகத்தில் 257
எத்தனைகால மிருந்தாலும்பூமிதனில்
அத்தனிட்டநாள்வந் தடுத்தாற்றடுப்பதுண்டோ 258
நடத்துங்கிரியை நடத்தவழிபாராமல்
திடத்தைவிட்டுப்புத்தி சிதைவதுகாரியமோ 259
என்றமைச்சர்கூற விறைவன்மனந்தேறி
வென்றியுளவேந்தன் மின்னார்தனையழைத்து 260
செய்யுங்கிரியைதனைச் செய்யுமெனவுரைத்தான்
துய்யமதிவதனத் தோகைதனையெடுத்து 261
நீராட்டிமஞ்சளிட்டு நெற்றிக்குநீறணிந்து
பாராட்டும்மங்கைக்குப் பாவையர்கள்பூணணிந்து
வையத்திறைக்கந்த மங்கையர்கள்சொன்னார்கள்
தையலாள்தன்னை தனியோர்பல்லக்கில்வைத்து 263
ஈமத்தினிற்சென் றியல்பாஞ்சடங்கதனைத்
தாமமணிவோன்மிகவாய்த் தன்னுடையபுத்திரிக்கு

பூமன்னன்செய்து புறப்பட்டான்தன்னகர்க்குச்
சேமமுளவேந்தைத் தேற்றினார்மந்திரிமார் 265
வல்லார்தனத்தி வரலாறதையுரைத்தேன்
மல்லார்புயத்தான் வடக்குத்திசைநோக்கிச் 266

## இராசகுமாரன் அழகாபுரியின் இராசகுமாரியை விசாரித்தல்.

சென்றமைந்தன்காதையையான் செப்புவேனம்மானை
மன்றலுலகின் வளங்கள்தனைப்பார்த்து 267
திரும்பினான்தன்னுடைய தேசமதற்கேக
வரும்போதுமைந்தன் மதித்தான்தன்புத்திதனில் 268
தொழுவோர்கிரீடமெலாந் தோயுங்கழலுடையான்
அழகேசனீன்றகுண வன்பானபெண்கொடியாள் 269
என்மீதிலாசை யிருந்ததிலலவோ
மின்னாள்விபத்தை விலக்கினாளாதலினால் 270
கன்னியுடையக்ஷேமங் கண்டுநம்மூர்க்கேகி
மன்னனிடத்தில் வழுத்திமணமுடிக்கச் 271
செய்வோமென்றெண்ணித் திரும்பிவழிகூடி
மய்யரிக்கண்மாது மன்னுமழகாபுரிக்கு 272
வந்தரசன்தந்தமகள் வஞ்சியிடையாளிருக்குந்
செந்திருவார்மாடியதைத் தென்னவனுமேபார்த்து
மானார்விழிபோற்கண் மாதையங்குகாணாமற்
போனாரிருவரங்கு போனவரைத்தான்பார்த்து 274
மன்னன்மகளிருக்கும் மாளிகையுமிதுவோ
இன்னமெவரும் இருப்பதுண்டோவெனவே 275
நாட்டரசன்கேட்க நவில்வாரவர்களுமே
நாட்டகமன்னன் றனையையிதிலிருந்தாள் 276

இப்போதெவருமிங்கே இல்லையெனவுரைத்தார்
அப்போதிளமன்ன னறைவானவட்குமணம் 277
முடிந்ததோவென்ன மொழிவாரவர்களுமே
மடிந்தாளெனவதனை மன்னன்மகன்கேட்டு 278
என்னையாநீரும் இடிவிழுந்தாற்போலுரைத்தீர்
மின்னாளுக்கென்ன விதமாய்மரணமென்றான் 279
ஆர்க்குத்தெரியும் அறியோங்காணென்றார்கள்
தீர்க்கமுளமைந்தன் சென்றான்மடமதற்கு 280
முன்னம்மடிவுசெய்த மூர்க்கனதிலிருந்தான்
கன்னல்வேளென்னவந்த காளைதனைப்பார்த்து 281
நன்னயமில்லான் நவில்வானரசனிடம்
மன்னனேமுன்னமிங்கு வந்ததுண்டோவெனவே 282
கேட்டமுடவனுக்கங் கேதுசொல்வானிறைவன்
சேட்டையுடையாய் தெரியவில்லையோயானும் 283
குருத்தோலையொன்று கொடுத்தேனதைப்பார்த்துச்
செருக்குடையமன்னன் சிரச்சேதஞ்செய்வதற்குச்
சொன்னானெனவதனைச் சுந்தரியாளறிந்து
மன்னுமிவ்வூரைவிட்டு மாறிவிடுமென்றெழுதி 285
இருக்குதெனச்சொன்ன திலையோதான்ஞாபகமும்
உருக்கமுளாய்நீயெனக் குபகாரியாகையினால் 286
எனக்கோர்சந்தேக மிருக்கின்றதேயதனை
மனத்திற்கரவுதல்நீ வையாமற்சொல்லுமென்ற 287
கோமான்றனைப்பார்த்துக் கூறுவானந்தமிலான்
பூமானேகேட்கும் பொருள்யானறிந்திருந்தால் 288
செப்புவேனென்று தெரிவித்தான்மூடனுமே
அப்போதுமைந்த னவன்றன்முகம்நோக்கி 289

மாடமொளிசூழ்ந்த மணிநகரையாளுபவன்
தேடும்புதல்வியிங்கு சென்றாளெனவுரைத்தார் 290
என்னவிதமா யிறந்தாளெனும்விவரம்
உன்னைவிசாரித்தா லுண்மைதெரியுமென 291
வந்தேனெனவுரைத்த மைந்தன்றனக்கவனுஞ்
சிந்தைவருந்தியுண்மை செப்புவான்மைந்தனிடம் 292
வனக்கேசரியுமக்கு வஞ்சகஞ்செய்துவிட்டேன்
எனக்கெந்நரகை யிடுமோமறலியுந்தான் 293
குடம்போற்றனந்தாள் கொடியமயல்தணிக்க
மடத்திலிருமின்று வருவேனெனவெழுதி 294
இருந்துமுமக்கே யெதார்த்தமுரையாமல்
அருந்துமசனத்தை யடித்துப்பறித்தவர்போல் 295
பொய்சொன்னேன்யானுமவள் போகந்தனைவிரும்பி
தையலிங்குவந்தாள் தனியனாய்மூலைதனில் 296
படுத்திருந்தேனென்னைப் பைங்கிளியுநீயெனவே
அடுத்தென்மேற்கைவைத்தவள்தன்னுயிரைவிட்டாள்
என்றுமுடவன் இசைத்தானவனிடத்தில்
நன்றாயிருந்ததிந்த ஞாயமெனக்கருதி 298

## இராஜகுமாரன் இராஜகுமாரத்திமரணம் கேட்டு பாஷாணத்தை யருந்தியிறந்தது.

இடிகேட்டசர்ப்பமென வேங்கியோசிக்கலுற்றான்
துடியிடையாள்கற்பை யென்னசொல்வேனெனக்காக
மண்ணாசையற்று மடிந்தாளைவிட்டினியோர்
பெண்ணாசைகொண்டாற் பிரயோசனமலவே 300
செறியுமுலகில் நரசென்மமெடுத்தநமை
அறிவூறுங்கல்வியிலா னாகப்படைத்ததினால் 301

செல்வியெழுத்தைத் தெரிந்திடவேநமக்குக்
கல்வியிலாததினாற் காரிகையுமேயிறந்தாள் 302
மாசற்றகூந்தல் மடவாளுடன்கூடத்
தேசுற்றநாமுமினிச் செல்வதுவேஞாயமெனத் 303
தேசாந்தரஞ்சென்ற செல்வனுறுதிசெய்து
பாசாணமுண்டு படுத்தானங்கேயிறந்தான் 304

## அந்நகரத்தார் இராஜகுமாரனைத் தகனஞ்செய்யல்.

தேவேந்திரனைநிகர் செல்வமிகவுடைய
பூவேந்துமைந்தனொரு பூவையினாலேயிறந்தான் 305
அந்நகரிலுள்ளவர்களாரோபரதேசி
இந்நகர்தன்னி லிறந்தானெனவெடுத்து 306
மயானமதிற்சென்றேமுன் மாதைவைத்தமண்டபத்தி
றயானகுணமன்னன் றனிச்சேய்தனையெரித்தார் [ற்
இந்தவிதமாக விறந்தவிருவர்களும்
அந்தமடத்தில் அலகைவடிவாகி 308
இரவிலதனில் இருப்போர்கள் தான்வெருவக்
குரவையிட்டங்கே குடியாயிருந்ததுவே 309
வருடமொன்றானதவர் மாண்டநாளவ்விடத்தில்
திருடர்களுங்கூடிச் சேராரிரவதினில் 310

## ஔவையார் மடத்திற் பிசாசமாயிருந்த இருவர்கட்கும் வரமளித்தல்.

இவ்விதமாக இருக்கின்றநாளதனில்
அவ்வையொருநாளிரவி லந்தமடத்தில்வந்து 311
படுத்தாளொருசாமம் பாகினியமென்மொழியாள்
அடுத்தொருபெண்பேயு மறையஎற்றெற்றெனவே

சத்தமிடவேயதனைத் தண்டமிழாளறிந்து
உத்தமப்பெண்ணவ்வை யுரைப்பாளதைப்பார்த்து

அவ்வையார்சொன்ன வெண்பா.

வெண்பாவிருகாலிற் கல்லானைவெள்ளோலை
கண்பார்த்துக்கையா லெழுதானைப்பெண்பாவை 314
பெற்றாளேபெற்றாள் பிறர்நகைக்கப்பெற்றாள்மற்
றெற்றோமற்றெற்றோமற் றெற்றோமற்றெற்றெனவே
அவ்வையார்சொன்ன வதின்பொருளைப்பேயுஞ்
செவ்வையுறுங்கல்வி தெரிந்தபேயாதலினால் 316
பூவையிவள்நமது பூருவத்தையுணர்ந்தாள்
பாவையுயர்தெய்வமெனப் பார்த்துமனதிலெண்ணி
தான்சென்றபேயிரண்டாஞ் சாமந்தனிலுமது
மீண்சென்றகண்ணவையை மேலுமிரட்டிதற்கு 318
எற்றெற்றெனவே யிவளதனையேபார்த்து
நற்றமிழாளவ்வை நவின்றாளொருகவியை 319

அவ்வைசோல் வெண்பா.

எண்ணாயிரத்தாண்டு நீரிற்கிடந்தாலும்
உண்ணீரமில்லாக் கிடைச்சடைபோல்வண்ணமுலைப்
பொற்றொடிமாதே புணர்முலைமேற்சாராரை
எற்றோமற்றெற்றோமற் றெற்றோமற்றெற்றெனவே
அவ்வையுரைத்த வதனுட்பொருடனையுஞ்
செவ்வைபடவுணர்ந்து சென்றதந்தப்பேயதுதான்
முன்னமேவந்ததுபோல் மூன்றாஞ்சாமந்தனிலும்
பின்னுமந்தப்பேய்தான் பின்னுமிருந்ததுவும் 323
எற்றெற்றெனவே யிரைந்துவரவதனைப்
பற்றக்கருதிப்பகர்வாள் பின்னவ்வையுமே 324

அவ்வைசொல் வெண்பா.

ஞானமுளதே மறையுளதே வையகத்தில்
தானமுளதே தன்மையுளதே யீனமுற 325
எற்றோ பிழைத்தோமென் றேமாந்திருப்போரை
எற்றோமற் றெற்றோமற் றெற்றோமற் றெற்றெனவே
தோயுங்கலையுடையாள் சொன்னாளதையுணர்ந்து
பேயும்விலகியுமே பின்னு நாலாஞ்சாமம் 327
வந்ததுமுன்போல் வழுத்துவாளவ்வையுமே
எந்தனுக்குநித்திரையு மில்லாமற்செய்துவிட்டாய்

அவ்வைசொல் வெண்பா.

கருங்குழலி சூறைக் காட்டின் கனிபோல
வருந்திநிற்கக் கன்னியர்தம் வாழ்க்கை யரும்பகலே
பற்றிப் பழம்பொருளைத் தாயத்தார் கொள்வாரென்
றெற்றோமற் றெற்றோமற் றெற்றோமற்றெற்றெனவே
நான்குசாமத்தில் நவின்றகவியுணர்ந்து
மான்கணிகர்கண்ணாள் மடவாள்கிருபையினால் 331
ஏதுமிலாநமக்கோ ரேதுவுண்டாகுமென
மாதுமுன்ரூபம்விட்டு மங்கைவடிவாகி 332
சென்றதவ்வையிடத்தில் தீர்க்கதண்டந்தான்புரிந்து
நின்றதனைப்பார்த்து நிகழ்த்துவாளவ்வையுமே 333
மாதிங்குவந்த வரலாறுரையுமென
ஏதுவாய்ப்பெண் ணியம்புவாளவ்வையிடம் 334
மேலவணிநகரின் வேந்தன்குமாரியென்பேர்
ஏலங்குழலென் றியம்புவாரெந்தனையும் 335
பைம்பொன்மணிமேடையின்மேற் பாங்கியர்கள்தம்முடனே
கும்பாகப்பந்துகையிற் கொண்டங்கடித்துநின்றேன்

அன்னியதேசத் தரசன்சுதனொருவன்
மன்னுமழகிலுயர் மன்மதன்போலங்குநின்றான் 337
நானவன்மேலாசையினால் நாயகனேயிவ்வூர்க்கு
மானுமேல்பக்கம் மடத்திலிருமின்றிரவு 338
வாரேனெனவெழுதி மன்னன்முன்னேபோட்டு
காரோதிராதிரியிலோர் கன்னிகையாடன்னுடனே 339
வந்தேன்யானிம்மடத்தின் மன்னுகன்னிமூலைதனில்
முந்தையுறுமுகத்தில் முக்காடிட்டேயொருவன் 340
படுத்திருந்தானவனைப் பார்வேந்தெனனினைந்து
அடுத்தவன்மேற்கைவைத் தறிந்தேன்முடவனென்று
இகத்திலபகீர்த்திக் கிடமாச்செனமயங்கி
அகத்தில்நினைத்தங்கே யங்காத்துயிரிழந்தேன் 342
என்றாளப்பெண்ணுமங் கேதுரைப்பாளவ்வையுமே
குன்றாதகீர்த்தியுள கோதையேயுன்னுடைய 343
கருத்தைவெளியிட்டாற் கடவுள்கிருபையினால்
வருத்தமுறாமல் வரமளிப்பேன்யானுமென்று 344
சொன்னவளைப்பார்த்துத் துரைமகளுமேநினைந்து
மன்னவனைச்சேர வரமெனக்குநல்குமென்று 345
பாதந்தனில்வீழ்ந்து பணிந்தாளரசன்மகள்
சாதகமாயவ்வை சாற்றுவாள்மங்கையர்க்கு 346
தேமொழியேநீயிறந்த சேதியறிந்தேயவனும்
காமினிமேலிருக்க ஞாயமுந்தானில்லையென 347
பார்வேந்தன்மைந்தனுமே பாஷாணந்தன்னையுண்டு
தார்வேந்திறந்தலைகை தானாகியிவ்விடத்தில் 348
இருக்கின்றானென்றங் கியம்பினாளவ்வையுமே
உருக்கமாயவ்வை யுரைத்தமொழிகேட்டு 349

நாமிருக்குந்தன்மைதனை நாடியுரைத்ததினால்
க்ஷேமம்பெறும்படிசெய் தெய்வமிவளாமெனவே 350
ஆவேசமான வரசன்மிகமகிழ்ந்து
கோவேந்தனைகவுருக் கொண்டவனுமேயெழுந்து 351
வந்தவ்வையார்தன் மலர்ப்பதங்களைப்பணிந்து
சந்தாரும்மார்பனுமே தானோர்புறத்தினின்றான் 352
அங்கருகில்நிற்பவளை யவ்வைமுகம்நோக்கி
இங்குநிற்கின்ற இவளுக்கோவாசையுற்றாய் 353
தேமாந்தளிர்மேனிச் செல்வியேசெப்புமெனப்
பூமாதனமாதிப் பூமன்றனென்றுரைத்தாள் 354
வேதமுதல்வன் விதித்தவயதைம்பதிலே
சாதகமீராறுண்டு தானிருந்தாய்கன்னிகையாய் 355
மன்னுமல்லைகயுரு வானுமொருவருடம்
இன்னுமுப்பத்தே ழிருக்கிறதினால்வயது 356
உற்றதொருசோணாட் டுறையூரெனுநகரிற்
கற்றோர்விரும்புங் கரிகாலசோழனிடம் 357
ஆலாத்திப்பெண்கள் பன்னீராயிரம்பேருண்டதிலே
மாலாக்கும்பெண்ணுள் மரகதவல்லியிடம் 358
வரத்தாலுதிப்பாய்நீ மங்கைவடிவாகச்
சிரத்தையுடன்வளர்ப்பார் தேவியேதேகமதிற் 359
சண்பகவாசமிகத் தானுமுண்டாகுமதைத்
தன்பரவைசூழுந் தரணிபன்புத்திரியும் 360
தானறிந்துன்றனுக்குச் சண்பகவல்லியென்று
வானவருமேதுதிக்க வைப்பார்திருநாமம் 361
ஓதினியமின்போ லொழியாமல்மேகமதில்
மேதினியோர்கள் விரும்பும்படியாக 362

வளரும்பொழுதினிலே மானேபருவமைந்திற்
றளர்விலாக்கல்விமிகுஞ் சாலைதனிலேயிருந்து 363
வாத்தியார்தன்னிடத்தில் மாதேசகலமுநீ
நேத்தியாய்க்கற்றுலகோர் நின்னைப்புகழ்ந்தேத்த 364
தாளசுரக்யானராச சங்கீதமும்பரதம்
காளம்நிகர்விழியாய் கற்பாய்வயதேழில் 365
பன்னிரண்டாம்வயதிற் பக்குவமேயாகிடுவாய்
தன்னையறிந்தாண்டு தானிருபத்தைத்தைந்துவரை
கன்னிகையாயிருப்பாய் காரிகையேநின்னைத்த
மன்னவனுமவ்வூரில் வந்துவிறகுவிற்போன் 367
றனக்குரியபாலகனாய்த் தான்பிறப்பானேயவனும்
உனக்கேகணவன் ஒளிசேர்நுதலணங்கே 368
நற்கீரராலே நடக்குமணமுனக்கு
அற்பூரும்பெண்ணே யரசனுலுங்களுக்கு 369
நன்மைக்கிடமங் நகர்க்கேகுமென்றதெய்வத்
தன்மையுடையவளைத் தான்பணிந்தேயிரண்டும் 370
மார்க்கமுடனவைகள் வந்ததுறையூர்க்குத்
தீர்க்கமுடனவ்வை சென்றுளவ்விடம்விட்டு 371
இறைவன்மகளவ்வை யினியமொழிப்படியே
உறையூரரசனுக்கே யுற்றபணிமாதர்களில் 372
மரகதவல்லியெனும் மாதுடையகர்ப்பமதிற்
சரதமுளமாது தரித்தாள்சிசுவாக 373
வேந்தன்மகனவ்வூர் விறகுதலையனிடம்
சாந்தமுளான்வந்து தகமையுடனேபிறந்தான் 374
கிள்ளைமொழியாள்தன் கெர்ப்பந்தனிலிருந்து
பிள்ளைகலிதீர்க்கப் பிறந்தாளேலங்குழலி 375

எந்தவுலகத்து மிதுவரைவேதன்படைத்த
பைக்தொடியாரழகு பகல்விளக்குபோலாக 376
நந்தாமணிவிளக்காய் நாளொருவண்ணமாகச்
செந்தாமரையிலுறை தேவியெனவேவளர 377
தளிரனையாள்மேனிதனிற் சண்பகவாசங்கமழ
களிறனையானூரிற் கதித்துப்பரவினதால் 378
தாரேந்துமன்னன்மகள் தாதிதனையழைத்துக்
காரேந்துகூந்தலுள காரிகையேயிவ்வாடை 379
ஏதெனவேகேட்க விசைப்பாளத்தாதியுமே
மாதுநல்லாளந்த மரகதவல்லிபெற்ற 380
புத்திரியின்மேனி பொருந்துகின்றதிவ்வாசந்
தத்தைமொழியா யெனவத்தாதியுரைத்தனளே 381
சிந்தைமகிழ்வாகத் தேர்வேந்தன்புத்திரியும்
இந்துமுகத்தாளை யிவிடமழையுமென 382
பாங்கியர்களோடிநல்ல பைங்கிளியாளிடத்தில்
சங்குவாயுன்னை யிறைவன்மகளழைத்தாள் 383
என்றவுடன்றாதி யெழுந்துவிரைவாகக்
குன்றமுலையாள்கை கூப்பியெதிரில்நின்றாள் 384
கோதாயுன்புத்திரியைக் கொண்டிங்குவாவெனவே
தாதாடுங்கூந்தற் றையல்விரைவாயோடி 385
எடுத்துவந்த 'விறைவன்மகளிடத்தில்
கொடுத்தாளக்கன்னி குழந்தைதனைப்பார்த்து 386
பண்புநிறைந்தோங்கும் பைங்கிளியாள்தானதற்குச்
சண்பகவல்லியெனச் சாற்றினள்நாமமதை 387
மந்தரமன்னபுய மன்னனச்சோழனுமே
அந்தக்குழந்தை யதிசயத்தைத்தான்பார்த்து 388

மங்கையரில்மெச்சும் மரகதவல்லிதனை
இங்கிதமோடின்ன மிருக்கோகுழந்தைகளும் 389
நங்காயெனக்கேட்ட ராசன்றனைப்பார்த்து
மங்கைமரகதமா வல்லியுரைத்திடுவாள் 390
மலைநேர்புயத்தரசே மன்னவர்க்குப்பேரேறே
அலைசூழ்புவியா ளாகேசனுமரசே 391
அரண்மனைத்தாதி பன்னீராயிரம்பேர்களுக்கும்
திரமானபெண்குழந்தை சென்மித்திருக்குதென 392
அப்போதரச னவளைமுகநோக்கிச்
செப்பன்னமென்முலையாய் செப்புவதைத்தான்கேளு
இங்கவொன்றுக்காயிரம்பொன் சேயிழையேநான்றருவேன்
மங்கையேவாங்கி வளர்ப்பாயிப்பிள்ளையைநீ 394
என்றுபுவிவேந் தியம்பும்மொழிகேட்டு
நன்றெனவேயவளும் நடந்துதன்மாளிகைபோய்ச்
சிந்தைமகிழ்வாய்ச் சிசுவதனைத்தொட்டிலிட்டுக்
கந்தமலர்க்குழலக் காரிகையாளப்போது 396
தாலாட் டவேநினைந்து தானூட்டினளவளும்
மேலாட்டமானமணி மேகமெனக்கொடுக்குஞ் 397
செயமார்ந்தமன்னரையுஞ் சீர்புவியுள்ளோர்களையும்
மயலாக்கவந்தமயிலே நீகண்வளராய் 398
வன்னெஞ்சிறந்தமுலை மால்வரைமேல்மாதவத்தோர்
தன்னெஞ்சைக்கட்டுந் தையலேநீகண்வளராய் 399
வெங்காதலுற்றவெகு வீணர்களையன்னநடைச்
சிங்காரப்பின்னலுக்குள் சிக்கவைப்பாய்கண்வளராய்
உலைபுகவேகாய்ச்சி யுருக்காதொளிமிகுந்து
துலைபுகாமாற்றுயர்ந்த சொன்னமேகண்டுயிலாய் 401

அன்னந்தனக்கு மழகார்சுகமதற்குங் [ய்
கன்னல்மொழியைநடையைக் கற்பிப்பாய்கண்வளரா
சித்ரமுயிர்பெற்ற செயல்போல்விசித்திரமாய்
அத்ரமதனன்போ லரசுசெய்வாய்கண்டூங்காய் 403
வல்லார்ந்தகொங்கை மடவார்களாடவர்கள்
எல்லோரையும்மயக்கும் இன்பமேகண்வளராய் 404
வானவர்கோன்மின்னாள் மாதிந்திராணியர்க்குந்
தேனமர்கூந்தல்ரதிக்குந் தெய்வமேகண்வளராய் 405
வேதனுனைக்கான வெகுநாடவமிருந்து
சாதகத்தாலேபடைத்த தங்கமேகண்வளராய் 406
இரும்பதனைக்காந்த மிழுப்பதுபோலாடவர்தந்
திருந்துமனத்தைக் கவருந்தெய்வமேகண்வளராய்
சிந்தைமகிழ்வாகச் சேயதனைத்தாலாட்டிச்
சுந்தரியாள்சிசுவைத் தொட்டிலிட்டேயெடுத்து 408
நிடியமெருசெய்யிலிட்ட மிக்கபயிரதனைப்
படியில்வளர்க்கும் பருவம்போலேவளர்த்தாள் 409
பூரணபட்சத்துமதி போலேவளர்ந்ததுவே
ஆரணமெல்லாமுணர்ந்த அங்கராள்வோன்மகிழ்ந்து 410
பார்த்தான்குழந்தை பருவமைந்தானதினல்
வாத்தியார்தன்னை வரவழைத்தாவலுள 411
கோமகனும்பள்ளிக் கூடமதனில்வைத்தான்
பூமன்னமாதுமுயர் பூலோகந்தன்னிலுள்ள 412
பாரதம்நன்னூல்நிகண்டு பாகவதம்மாநீதி
சாரந்திவாகரமுந் தண்டலையார்சதகம் 413
காரிகையின்னூல் முதலிற்கற்ருள்வயதேழில்
ஆரியமுந்தெலுங்கு மறிந்தாள்கலைமகள்போல் 414

சங்கீததாளசுரஞ் சாதுரியமாம்பரதம்
மங்கையறிந்தாள் வயதுபனிரண்டினுக்குள் 415

அண்ணலறிந்தங் கழைத்துச்சமுகமதிற்
பண்ணிறைந்தகீதம் பரதசுரமதுவும் 416

பங்கயம்போல்வதனப் பாவைமொழிருசியும்
மங்கைநல்லாளின் வடிவுமவள்குணமும் 417

சீர்த்தியுந்தண்டமிழின் சீருந்தனியரசன்
பார்த்துமகிழ்ந்து பகர்வானங்கின்றுமுதல் 418

தமிழறியும்பெருமாள் தக்கதொருநாமஞ்
சிமிழ்போற்றனத்தாளே செய்தோமெனவுரைத்த
கோமானிடந்தனிலே கூறுவாள்பெண்ணணங்கு
பூமானேகல்வியெனும் போரிற்செயித்தவர்கள் 420

நாடுங்கலவிக்கு நானுரியள்தேராதைக்
கூடுவதில்லையெந்தக் கோமன்னர்வந்தாலும் 421

ஆயிரம்பொன்னை யவர்களிடம்யான்வாங்கிப்
பாயிரமொன்றனுப்பிப் பண்பாம்பொருளதற்கு 422

அறையுமெனவே யனுப்புவேனங்கவர்கள்
இறையேபொருளறியா யினர்களையான்விலக்கித் 423

தினமொன்றுக்காயிரம்பொன் தேடிச்செலவுசெய்து
கனமாரும்மன்னவனே கன்னிகையாயிருப்பேன் 424

என்னும்விவரம் இயம்பினளேந்தலிடம்
மன்னவனுங்கேட்டு மனதுமிகமகிழ்ந்து 425

அன்னவனுந்தன் னமைச்சனுடன்கலந்து
கன்னிகாமாடமுமே கட்டினன்காரிகைக்கு 426

எடுத்தான்மதிளேழ் இமயமலையதுபோல்
அடுத்தமனைவாச லாறுபத்துநான்கமைத்து 427

கற்றுச்சொல்லில்மிருந்த கன்னியருக்கோர்வாசற்
பற்றிக்கடிக்கவரும் பாய்ச்சல்நாய்க்கோர்வாசல் 428
சூத்திரப்பாவைதுலங்கு மொருவாசல்
காத்திரமான கரடிக்கொருவாசல் 429
வேற்றுள்தனையடிக்கும் வேங்கைக்கொருவாசல்
மாற்றுருயிர்கவரும் வன்புலிக்குமோர்வாசல் 430
குன்றுவலிமேவுங் குரங்குக்கொருவாசல்
சென்றுரைப்பங்கமது செய்வாடன்வாயலிலோர் 431
கூபத்தின்மேற்பலகை கோத்திருக்குஞ்செல்வோரை
தாபப்படவதிலே தாழ்த்திவிடும்வாசலொன்று
குங்குமத்தைச்சேறுய்க் குழைத்தெள்ளிடமில்லாமல்
எங்கும்நிறைந்தநல வின்பமுளவாசலொன்று 433
சேற்றைமிதித்தங்கு சென்றவர்கள்கால்கழுவ [ல்
தேற்றுபன்னீராழாக்குச் செய்யவெள்ளித்தட்டநனி
அக்கரையில்வைத்த வழகுமங்கேநுழைந்த
தக்கவரையேமயக்கத் தானமைத்தசாவடியும் 435
பாரதம்ராமனுயர் பண்புமரிச்சந்திரன்றன்
சீரதுவும்நளனுர் செய்யசரித்திரமும் 436
அங்குமணியா லழகுபெறுமண்டபத்தில்
எங்குஞ்சிறப்பா யெழுதினபல்சித்திரமும் 437
நீராழிமண்டபமும் நீள்பளிங்குமண்டபமுங்
தாரார்குழலார் தமிழறியுமண்டபமும் 438
ஏத்துமிசையின் எழிலாருமண்டபமும்
கூத்துநடத்துங் குருமணியார்மண்டபமும் 439
சேவலுடன்சேவல் செருச்செய்யுமண்டபமும்
ஆவலுடன்றகர்க ளார்த்தமர்செய்மண்டபமும் 440

பிறங்கலுறும்நல்ல பிடியானைத்தந்தமதால்
நிறமிகுத்தேயொளிரும் நீட்சியுளகட்டிலொன்று 441
களிற்றானைத்தந்தக் கடைதல்செய்தகட்டிலொன்று
தளிரியவர்ள்மாளிகையில் சப்ரமஞ்சமாயமைத்துக்
காவலவன்கட்டில்தனை காற்புறந்தலைப்புறமாய்ப்
பூவலவன்மாறிப் போட்டுத்தலைப்புறத்தில் 443
நேராயமையபளிங்கு நீளாடியைநிறுத்திக்
காராருமானையென்புக் கட்டிலின்காற்புறத்துக் 444
காதோடுவாதாடுங் கண்ணிதனக்குவரும்
போதோடுறும்புயத்து பூமன்னர்தான்படுத்தால் 445
தேடும்பிரதமையில் சென்றொன்றுகால்பிடிக்கும்
நாடும்விசிறிகொண்டு நன்றாய்விசிறுமொன்று 446
ஒன்றுகையைவருடு மொன்றுநெட்டிதான்வாங்கும்
நின்றங்கடைக்காயை நீட்டுமொருபதுமை 447
படிக்கமெடுத்தொன்று பக்கத்தெதிர்பார்க்கும்
படிக்குள் வெகுசாலம் பண்ணும்வகையறியா 448
மாந்தர்சிரசதனை வைத்தாக்காற்பக்கமதிற்
சாந்தமுளபொம்மை தலையைப்பிடித்திழுக்கும் 449
பின்னொன்றுநீரையுமே பெய்யுமவன்றலையிற்
சென்றங்கோர்பொம்மை சிரைக்குந்தலையைநன்றாய்ச்
சாணியுருட்டித் தலைமீதுவைக்குமொன்று
மாணிக்கத்தீபங்கொணர்ந்துவைக்குந்தலையிலொன்று
ஆண்டகையந்த வரண்மனைக்கட்டிடத்தில்
வேண்டும்விசித்திரங்கள் வேந்தனமைத்துவைத்துப்
பைங்கிளியாடனக்குப் பச்சைபல்லாக்களித்துச்
சங்குவளைமின்னார் தாதிபன்னீராயிரம்பேர் 453

உற்றதமிழறிவாட் கூழியத்துக்கேயமைத்துப்
பெற்றபெண்ணைப்போற் பிரியமுடனேயரசன் 454
சதுரங்கமானதொரு தானைபலவுடனே
மதுரமொழியாட்கு வழங்கினான்மன்னவனும் 455
ஆடுமியலிசைக ளார்ந்தவிருவர்தமைத்
தேடுதமிழ்க்குரிய செல்விதனக்கீந்தான் 456
அன்றுமுதலா யரசன்சபைக்கிவளுஞ்
சென்றுடல்பாடல்மிகச் செய்துவருவாள்தினமும்
அகுதிபரதேசிக் கன்னமிகவழங்கி
கிருதியுளதர்ம நெறிதவறிடாதபடி 458
அஞ்ஞானமான வகவிருளைத்தான்போக்கி
மெஞ்ஞானம்யார்க்கும் விளங்கும்படியுரைத்து 459
பாங்காயமைந்த பவளக்கால்மண்டபத்திற்
றூங்கியெழுவதுவுஞ் சொக்கட்டானாடுவதும் 460
பாங்கியர்களோடேநற் பந்துவிளையாடுவதுங்
கோங்கரும்பன்னமுலைக் கோதைசிறப்புடனே 461
காருறுமின்னுங் கடற்பிறவாப்புத்தமுதாம்
வேருறுப்பூங்கொடிபோல் வேந்தன்மகள்வாழ்நாளில்
பூமன்னன்றன்சபைக்குப் போகமனதிலெண்ணித்
தாமமுறுங்குழலார் தாதியர்நாயகிக்கு 463
வாசமிகும்பன்னீரால் மங்கைதனைநீராட்டிப்
தேசம்புகழ்மாதைச் சேடியர்கள்தாஞ்சேர்ந்து 464
வாடையுளமலரில் வண்டினங்கள்வீழ்வதுபோல்
ஆடவர்தங்கண்ணு மளிகளவள்மேற்பரவ 465
சந்தனமோர்தாதி தடவினள்மார்பதனில்
உந்தனுக்குநேரொருபெண் உண்டோவுலகமதில்466

ஆயிழைநீபாரெனநல் லாடிகொடுத்தாளொருபெண்
வேயின்நிகர்தோளாள் மேகமன்னுமோர்குழலை 467
வாரியொருதாதி வகுந்தசடைப்பின்னலது
காரிமுரசுடைய காமன்றன்நாரியதை 468
நேர்ந்தோர்குதையைநெகிழ்த்துவிட்டபாவனைபோல்
ஆர்ந்தமதிநல் முகத்திற்கானவழகுறவே 469
துடியிடையின்பின்னாரத் தொங்கவிட்டாளோர்தாதி
பிடிமென்நடையாள் பிறைசேர்நுதலதனில் 470
கதிரனையசுட்டிநன்றாய்க் கட்டினாளோர்தாதி
துதித்திடும்மாதவத்தோர் சொல்லுந்தவநிலையும் 471
ஆழியெனவேகாம னனுப்பியவோலைதனை
விழிக்குப்பகையை விளைத்திடுங்காதிலிட்டாள் 472
தந்திடையாள்நகைக்குத் தாழ்ந்ததராளமது
வந்துதந்தத்திலுயர் மாளிகையினோரமதில் 473
தூக்கிட்டிறப்பதற்குத் தோன்றுவதுபோல
மூக்கிற்புலாக்கையொரு மொய்குழலாளணிந்தாள்
கழுத்துக்குப்பூணைக் கட்டிவிட்டபாவனைபோல்
அழுத்தமுள்ளதாதி யணிந்தாள்சரடதனை 475
தையலாளென்னுந் தமிழறியும்பெருமாள்
கையதனில்வளையைக் கயல்விழிநேர்தாதியிட்டாள்
மையலுறும்மைந்தர்மனதுநடப்பதற்குச்
செய்தவழிபோலச் செம்பொன்மணிமாலையிட்டாள்
காமமிகுவார்கள்கண்ணைக் கட்டுமதற்கொப்பாகத்
தாமமணிவாளிடையிற் றானைதனையேதறித்தாள் 478
வாரணத்தின்வரவை மாமணியினாலறிந்து
தாரணியோர்களெலாந் தான்விலகுந்தன்மையைப்போல் 479

மங்கைவரவைநல்ல மைந்தரறியும்படியாய்த்
திங்கள்முகத்தாட்குச் சேர்ந்தாள்சிலம்பொருபெண்
இச்சையுளமாதிறைவனிடமேகப்
பச்சைப்பல்லாக்கையுமே பாங்கியர்கள்கொண்டுவந்தார்
செல்லேநிகர்குழலாள் சென்றுளதிலேறிக்
கல்லேநிகர்தோளார் கத்திகொண்டுமுன்னடக்க 482
வாகனத்தின்மீதேறி மங்கையர்கள்சூழ்ந்துவரச்
சேகரமாய்ச்சேனை இரண்டிருபாலும்நெருங்க 483
ஆனைபடைசூழ வகைவங்கள்முன்னடக்க
மானைநிகர்கண்மடவாள் மங்கையின்முன்பாடிவர 484
வாத்தியகோஷமது வாரிதியைப்போல்முழங்க
...த்திசைகள்கொண்டாடும்மன்னன்சபைக்குவந்தாள்
வந்தந்தமாதுமுயர் மன்னனடிதொழுது
கந்தரமன்னகுழற் காரிகையாள்தானடித்தாள் 486
தாரோதிநிர்த்தனத்தைத் தான்கண்டிமையமருள்
காரோதிமுக்கட் கடவுளிடஞ்சேர்ந்தால் 487
மாந்தரின்துன்பம் வழுத்தவென்றலாகாது
மாந்தளிர்மேனி மயிலின்நடனமதை 488
பார்த்தரசன்தான்மகிழ்ந்து பைங்கிளியாள்தனக்கோர்
சீர்த்தியுளபுடவை செம்பொனுபகரித்தான் 489
வாங்கியேமாதந்த மன்னன்சபைவிட்டேகித்
தாங்குபல்லக்கின்மிசை தாதியர்கள்தம்மோடு 490
மைப்படியுங்கண்ணாளும் வந்தாள்கடைத்தெருவில்
கைப்பிடித்தவாள்வேந்தன் கான்முளையின்காதைசொல்வேன்
அலகைவடிவாயிருந்தோ னவ்வையினல்வரத்தால்
உலகமதிற்சோணாட் டிறையுறெனுநகரில் 492

என்றுமேகாட்ட மெடுப்போன்சுதனைச்
சென்றுபிறந்தோன்றன் செய்திதனையானுரைப்பேன்
இந்தனத்தைவிற்றே யிவனும்வெகுநாளாய்ச்
சிந்தைமகிழ்வாகவிவன் சீவனஞ்செய்போதொருநாள்
அதிகாலைநேரமங் காவணவீதிதனில்
மதியிலானிந்தனத்தை மண்மதுவிலேசாத்தி 495
உட்குழிந்தகண்ணு மொழுகுங்கொடுவாயுங்
கட் கமதினீள்மயிருங் கற்றோர்மனம்வெறுப்ப 496
செவ்வானம்போலச் சிவந்தசிகையோடாரும்
எவ்வாமுகமுமொளியில் சுணைவினைபோல் 497
பல்லும்படர்ந்து பருத்தகறுவுதடும்
எல்லினிறம்போ லிருக்குமுடம்பழகும் 498
திருந்துமிடையிற் சேர்த்தஊனுங்கொடியும்
அருந்தவமில்லா னரையிலரிவாளும் 499
இந்தவிதமா யிருந்தானங்கோர்கடையில்
அந்தமுளமாது மருந்ததிக்கொப்பாவாள் 500
மூங்கிலனதோளார் முன்பின்னுஞ்சூழ்ந்துவரத்
தாங்குபல்லக்கின்மிசை தையலாள்தானேறி 501
தேசத்தரசனிடஞ் சென்றவளுமேதிரும்பி
வாசத்தார்மங்கையுமே வந்தாள்கடைத்தெருவில் 502
சோர்ந்துவிறகுச் சுமையோரம்நின்றவனை
ஓர்ந்தசிங்கப்பட்டே யுரைப்பாடன்றோழியிடம் 503
கண்டாயோபெண்ணே கடையோரம்நிற்குமந்த
மிண்டனுருப்போலிம் மேதினியிற்கண்டதில்லை 504
இப்படியும்வேதனுமேயேன்படைத்தான்கைவருந்தச்
செப்புமுலைமாதருமே சேர்வாரோபாரெனவே 505

கோமகளுங்கேட்கவுமே கூறுவாள்தோழியுந்தான்
நாழுகட்குநேராகும் நங்காயுலகமதில் 506
இவனுக்குமோர்பெண் ணிருப்பாளெனவுரைத்தாள்
கவனிப்பிலாதவனைக் காரியுமிழ்ந்தாளவளும் 507
பார்த்துவிறகுவிற்போன் பாவைகருவமதை
வேர்த்துமனதிலவன் வேணதெலாந்தானினைந்தான்
வேசியிவள்வேந்தன் வெள்டாட்டியாயிருந்தும்
யோசியாதென்னை யுமிழ்ந்தாளிதுமுதலாய்த் 509
தேடியோராயிரம்பொன் சேர்த்திவளுக்கேயளித்துக்
கூடிடாவிட்டாலோர் கோசாநாலுவனென்று 510
விறகுதலையன்றன் வீட்டுக்குஞ்செல்லாமற்
சிறப்பமைந்தகாடதனிற் சென்றவனுமேதழைத்த
பூமரத்தைவெட்டிப் பொற்புறவேதாபமதாய்
மாமரத்தினீழல்தனில் வந்துபடுத்திருந்தான் 512
வருடமொன்றுக்கோர்கனி யம்மாமரத்திற்றன்பழுக்கும்
தருவிருந்தவிந்தனத்தோன் றனுமதைப்பார்த்து 513
இன்பமுளவக்கனியை யேறிப்பறித்தவனும்
அன்பாயதனை யருந்தாமலேமடியில் 514
வைத்தவன்றன்பின்னும் வனத்தில்விறகுவெட்டச்
சித்தமதிலெண்ணித் திரும்பினன்காவதற்கு 515
இந்தக்கனியை யிவன்பறித்துச்சென்றதன்பின்
அந்தவனத்தே யருமையுளவோர்தவசி 516
வருடமொன்றுசென்று வந்தம்மரத்திருக்கும்
அருமையுளநற்கனியை யம்முனியுந்தானருந்தி 517
மாதவத்தைச்செய்யும் வழக்கம்போலேமுனியுஞ்
சூதவிருட்சமதைச் சுற்றியவர்பார்த்து 518

முக்கனியிலொன்றை முனிவனுங்காணாமற்
றக்கவிறகு தறிப்பவனைத்தான்பார்த்து 519
மதியுடையாயிந்த மரந்தனிலேதானிருந்த
அதிமதுரக்கனியை யாரும்பறித்ததுண்டோ 520
சொல்வாயெனக்கேட்ட தூயவனைத்தான்பார்த்து
மல்லாருந்திண்புயத்து மன்னன்விறகுவிற்போன் 521
நான்பறித்தேனென்றவனும் நல்கினானக்கனியைத்
தான்வாங்கிக்கொண்டு தவசிமனமகிழ்ந்து 522
சுந்தரனேயிங்கு துலங்கும்விருட்சமெல்லாம்
சந்தனமாகும் தறிப்பாய்தினந்தோறும் 523
படியிற்பொருள்சேர்த்துனக்குப் பல்லாண்டுபல்லாண்டாய்
மிடியின்றிவாழெனவே வேதமுனிதானடந்தார் 524
வெட்டினானின்ற விருட்சங்கள்தன்னிலொன்றை
கட்டினான்சந்தனத்தின் கட்டைதனையவனும் 525
பண்டுவிறகு பகர்ந்தவிடங்களெலாங்
கொண்டுவந்தூரிற் கொடுத்தானனேகருக்கு 526
இந்தப்படியா யினங்கள்தவறாமல்
தந்தவிறகுவிலை தன்னைவாங்காதவனும் 527
ஏந்திழைக்காயிரம்பொன்னெப்படியும்நான்கொடுத்து
சாந்தமுளானைத் தழுவுவதற்கிச்சைகொண்டு 528
பின்னுமவ்வூரதனிற் பிச்சைகளுமேயெடுத்து
மன்னுவிறகுவிற்று வந்தான்தினந்தோறும் 529
வாங்கினவர்தாம்விலையை வாங்கிக்கொள்ளென்றாலும்
தாங்கள்கணக்கிட்டு தாராமல்வைத்திருந்தால் 530
சமயம்வரும்போது தான்வாங்கிக்கொள்வனென்று
அமைவுடனேயங்கு அறைவானவர்களுக்கு 531

இந்தப்படியாயிவன் விறகுவிற்றுவந்தான்
சிந்தைமகிழ்வாகச் செட்டியார்வீடதனில் 532
இருக்கும்பணிமா தெடுத்துவிறகதனை
மருக்கமழுந்தாராளும் வைத்தாளடுப்பிலொன்றை
வைத்தவுடன்சந்தனத்தின் வாடையெங்குமேபரவ
முத்துநிகர்பல்லாள் மூக்கில்விரல்வைத்துநின்றாள்
பாழியங்தோள்வாணிபனும் பார்த்தான்புகைவாடை
தோழியிவ்வாசமுந்தான் தோன்றுவதேதெனவே 535
செட்டியார்கேட்கவுமே செப்புவாள்தோழியுந்தான்
கட்டும்விறகினல்ல கட்டதனையோர்மனிதன் 536
கொண்டுவந்திங்கு கொடுக்கிறானிதிலோர்
துண்டெடுத்துமேயடுப்பில் சுந்தரனேயானதனை 537
வைத்தேனதிலிருந்து வந்ததிவ்வாசமென்று
உத்தமப்பெண்ணுமுரைத்தாள்விறகதனை 538
பார்ப்போமெனவணிகன் பார்த்தான்குவியலதை
ஆர்க்குமுகிலன்ன குழலன்பார்மதிநுதலாய் 539
கொண்டவிலையின்கணக்கைக் கோதாயிவளவென
செண்டுமுலைமாதாசே செப்புமெனவேயுரைத்தான்
மொய்குழலாளந்த முதலாளியைப்பார்த்து
மெய்யனேகாசவனும் வேண்டுவதேயில்லையென்றும்
தனக்கோர்சமயமதில் தான்வாங்கிக்கொள்வதென்று
மனக்கனிவாய்த்தானும் வாங்காமல்செல்லுகின்றான் 542
என்றுசொன்னாள்மா தியம்புவானவ்வணிகன்
நன்றுசொன்னாயவனை நம்முடையபொன்கடைக்குக்
கூட்டிவாவென்றவனைக் கூறியவனடந்தான்
வாட்டடங்கண்ணாள் மறுநாளுதயமதில் 544

வந்தவனைத்தானழைத்து மாசில்கடைக்கேகி
சுந்தரனேயவ்விறகு தூக்குமவனையழைத்து 545
வந்தேனெனவே வணிகனவனைப்பார்த்து
எந்தவூர்நீயிருப்ப திவ்வூர்புராதனமோ 546
மறையாதுரையுமென்ற வணிகன்றனைப்பார்த்து
அறைவானானையா அழகாருமிவ்வூரின் 547
பரதேசிகாட்டம் பகர்வோனெனவுரைத்தான்
கரவேயிலாவணிகன் கல்லார்புயத்தானை 548
அறைவாயிவ்வூரி லகங்கள்தொறும்போட்ட
விறகின்விலைவாங்கா விவரமுறையுமென்றான் 549
மேகமெனவேகொடுக்கும் மேருநிகர்தோளான்
பாகனையசொல்லார்கள் பார்த்துமடலெழுதுஞ் 550
செல்லனதிருபன் செயத்தில்ரகுராமன்
கல்விதனிற்கும்ப னதிகாரத்திற்சுக்ரீவன் 551
கண்டமாணிக்கம்முறை கர்னனாராயணனைக்
கண்டோர்கலிவிலகுங் காரணம்போலென்மனதில்
இருக்குங்குறையும்மா லீடேற்றவேண்டுமென்று
கருத்தினினைந்தேன் கடவுள்கிருபையினால் 553
முடிப்பாயெனவே மொழிந்தான்விறகுவிற்போன்
படிக்குளுயர்வாணிபனும் பகர்வானவனிடத்தில் 554
என்னவுன்காரியத்தை யென்னிடத்திற்சொல்லுமென
அன்னவணிகன்முன் னறையாதவனுநிற்க 555
அகலவிருந்தவனை யன்பாயழைத்துரைப்பான்
புகல்வாயுன்னெஞ்சின் பொருளைவெளியாக 556
என்றவனுங்கேட்க வியம்புவானிந்தனத்தான்
நன்றியுளாய்கேளும் நானும்நெடுநாளாய் 557

வனுஞ்சேறுமிவ்வூரில் வந்துவிறகுவிற்று
தினமுங்காலட்சேபஞ் செய்வதெனதுதொழில் 558
கடைத்தெருவில்யான்விறகுக் கட்டோடுநிற்கையிலே
படைக்கலஞ்சேர்வேந்தினுட பாங்கிவெகுபேர்சூழ
தமிழறிவாள்வந்தவளென் றன்னையெதிர்நோக்கி [வே
உமிழ்ந்திவனுக்கோர்பெண் ணுடன்படுவாளோவெ
செப்பியவள்தாதியிடஞ் சென்றுளதுமுதலாய்
எப்படியும்யானவளை யின்பமுடன்சேருதற்கே 561
எந்தன்மனத்தி லிருக்கிறதேதாரெண்ணமது
அந்தப்படியா னனுபவிக்கக்கையதனில் 562
காசொன்றிலாததினுற் காரிகையாள்தனக்குக் [க்க
தேசொன்றுமிப்பணத்தைச் சேர்த்தவளுக்கேகொடு
எண்ணிவிலையை யெவரிடத்தும்வாங்காமற்
பண்ணரிமாலைப்புயத்தாய் பாங்காய்நிறுத்திவைத்தேன் 564
என்றவ்வணிகன் இடத்திலவன்மொழிந்தான்
நன்றுநன்றென்று நகைத்தேயிவனிருக்குங் 565
கோலமென்னகைக்குவரக் கூடாதகாரியத்தில்
மாலமர்ந்தான்முன்பவத்தால் வந்தசெயலிதுவோ
கற்றவரும்புவியின் காவலர்களின்னுமுள
நற்றவர்க்குங்கிட்டாத நாயகிமேலிச்சைவைத்தான்
மேனாள்விதியை விலக்கவெவராலாகும்
மானுள்மயலில் மனதுனைந்தானெனவே 568
வீட்டில்விறகதனை மெய்யுடையான்தான்பார்த்துப்
போட்டான்மதிப்பாகப் பொன்னுமோராயிரந்தான்
இன்னுமிவ்வூரதனி லெங்கெங்குநீவிறகு
மன்னுநீபோட்டாய் வழுத்துமெனவேகேட்க 570

இவன்விறகுவிற்றவிட மெல்லாந்தலைருமல்
அவன்வணிகன்முன்னே யறைந்தான்காணம்மானை
கப்பாதவனையெலாந் தானழைத்தேயோரிடத்திற்
செப்புவனங்கிருக்குஞ் செட்டிமாரெல்லோர்க்கும்
ஊரங்கணநீ ருறவுநீர்சேர்ந்தாக்கால்
பேரும்பெரிதாகிப் பேருலகில்தீர்த்தமதாம் 573
குலத்திலிழிவுற்றோர் கூடினல்நல்லோனை
நலஞ்செய்தவர்குலமெந் நாளும்புகழோங்க 574
திருத்தியேகொள்வரெனச் செப்புமறையதுபோல்
வருத்தமுறுதிருக்கும் மார்க்கமதையாமருளி 575
நாமவைசியர்குலம் நம்மைநம்பிவந்ததினாற்
க்ஷேமமுளவரசாய் செய்திவனுந்தான்மகிழ 576
கோரினபெண்ணையும்நாம்கூடும்படிசெய்துவைத்தால்
வாரிவளைபூவில் மகிமைமிகவுண்டாகும் 577
என்றுமுதலாளி யியம்புமொழிகேட்டு
அன்றுவணிக ரனைவருஞ்சம்மதித்தார் 578
அவனையரசன்வடி வாக்கமனதிலெண்ணிச்
சவரகனையழைத்தே சவரமுஞ்செய்துபின்னும் 579
சம்பங்கியெண்ணெய் தலைக்கிடவேசெய்தார்கள்
அம்பொன்னனைஞ்ஞா ணவன்றன்னிடைக்கணிந்து
கடுக்கனிட்டுக்காதிற் கனத்தமுருகணிந்து
அடுக்காய்மணிபதித்த வாழியவன்கையிலிட்டு 581
காஞ்சிபுரம்பட்டுக் கரைச்சோமனையுடுத்திப்
பூஞ்சண்பகமாலை புனைந்தார்கழுத்ததனில் 582
தெண்டிரைபூமகடன் செய்யகழுத்தணியிற்
கண்டமாணிக்கமெனுங் கண்டமாணிக்கமதில் 583

நாடோறுமேபுகழ்சேர் நாராயணன்கொடுத்த
தாழ்விலாமுத்துச் சரமணிந்தார்மார்பதனில் 584
தையலுக்குவாய்த்த சமர்த்தனல்லதம்பிதைத்த
துய்யமகமற்கோட்டைச் சுந்தரன்மெய்யிலிட்டார்
படியிற்புகழோங்கப் பதினெட்டான்றைத்தெடுத்த
வடிவார்கலிக்கித்துரா வைத்தார்சிரசதனில் 586
ஆத்திமலர்சூ டாரைருட்குரிய
காத்தய்யாயீய்ந்தநலக் காஸ்மீரப்பட்டணிந்தார் 587
தக்கசிவகங்கை தனக்குமுன்பீபாயமைந்த
சொக்கலிங்கங்கொடுத்த சூடாமணியணிந்தார் 588
மன்மதனைப்போல் வடிவாயலங்கரித்துப்
பன்மணிகளமைந்த பல்லக்கின்மீதில்வைத்து 589
ஆயிழைக்காயிரம்பொன் னன்புடனேகொடுத்துத்
தாயிதழார்பல்லாக்கைச் சூழ்ந்துநெருங்கிவர 590
காவலனுக்கேசிலபேர் காளாஞ்சியேந்திவர
தேவரம்பையின்னனையார் சேர்ந்துநடமாடிவர 591
ஆவலுடனேயங் கடைக்காய்கொடுத்துவரப்
பூவலனைவந்தியர்கள் போந்துகட்டியங்கூற 592
அந்தகர்வாழ்வணிக ரன்புடனேயாவர்களுஞ்
சிந்தைமகிழ்ந்துமிகச் சிங்காரஞ்செய்துபின்னுங் 593
கோவேபோய்வாருமென்று கூறியவர்கள்சென்றார்
தேவேந்திரன்போலச் செல்வோன்றனக்குரிய 594
பறையினெழுமோசை பரவியாகாயமுதல்
இறைவனகரி விடிமுழக்கம்போலாக 595
வருமோசைகேட்டினிய மங்கைதமிழறியும்
பெருமாளுந்தன்றோழிப் பெண்களுடனேகூடி 596

மாடியின்மீதேறி வருமவனைத்தான்பார்த்துச்
சேடியரேயாரிவனெத் தேசத்துறைபவனோ 597
புவியரசோநாவிற் பொருந்துந்தமிழ்க்குரிய
கவியரசோநாக கந்தருவனோவெனக்காய் 598
பொன்கொடுத்தால்வாங்கிப் பூவையரேவாருமென்று
அன்புளதோழிகளை யாங்கனுப்பித்தானிறங்கி 599
சென்றுளரண்மனைக்குத் தேவிதமிழறிவாள்
நன்றும்விறகுதலை ராசனவள்மாளிகையின் 600
வாசறனிலேயிறங்கி வந்தபரிசனத்தை
நேசமுடனேசிறிது நேரம்நிறுத்திவைத்து 601
அப்பாலனுப்பி யடைப்பக்காரனுடனே
தப்பாமொழியுடையான் றானிருக்குமப்போது 602
அந்தமுள மா தனுப்பியதோழியர்கள்
எந்தநகர்வேந் திருக்குமிடமெனவே 603
தாதியர்கள்கேட்கத் தன்னுடையமனதில்
மேதினியாளுகின்ற வேந்தனலநாளும் 604
பேசியவிம்மாதருடன் பேசவரிதாகுமென
கூசிமறுவார்த்தை கூறாமலேயிருந்தான் 605
மங்கையரெலாமிவன்றன் வாய்மொழிசொல்லாதபடி
இங்கிருப்பதென்னவென வெண்ணிமறுபடியும் 606
பழமொழியோவேந்தே பகரல்புதுமொழியோ
கழறுமெனவேகேட்ட கன்னியர்கள்தன்னிடத்து 607
ஒன்றுமுரையாதிவனும் ஓவியம்போலேயிருந்தான்
மன்றலமர்கூந்தல் மங்கைகள்பின்னும்நோக்கி 608
கோவேகுறைகுடமோ கூறும்நிறைகுடமோ
மாவேறுமன்னா மறையாதுரையுமென்றார் 609

ஒன்றுமுரையாதிருக்க ஊமையோசொல்லுமென
மன்றலமர்தாரான் வதிலுரையாதிருந்தான் 610
யாதும்பதிலுரையா தங்கிருப்பதைப்பார்த்து
மாதுநல்லாரந்த மன்னனைப்பின்னும்நோக்கி 611
தார்வேந்தேயெங்கள் தலைவிதனக்குப்பணயம்
நீர்கொண்டுவந்ததுண்டோ நேரிலுரையுமென 612
மன்னுவிறலுத்தலையன் வாயைத்திறந்துரைப்பான்
கன்னியரோயுங்கள் கணிகையர்க்குயான்பணயம் 613
கொண்டுவந்தேனென்று கொடுத்தானவர்களிடஞ்
செண்டுமுலையார் வாங்கிச் சென்றுதலைவியிடம் 614
வைத்துவணங்கியந்த மாதரங்கேதானுரைப்பார்
முத்துநகைமின்னேநம் முன்றிலிடம்வந்தவனை 615
பார்த்தோமவன்முன் பகர்ந்தோஞ்சிலவார்த்தை
சீர்த்தியுளானென்றேனுஞ் செப்பாமலேயிருந்தான்
நீர்வந்ததென்ன நிலைமையுரையுமென்றோம்
தார்வேந்தனுங்கள் தலைவிதனக்காயிரம்பொன் 617
இந்தாருமென்றவனு மெங்களிடமேகொடுத்தான்
பைந்தொடியேயென்ற பாங்கியரைத்தான்பார்த்து
பத்தியுளமாது பகர்வாளேயம்மனிதன்
புத்தியுளானோவெனவப்போதுரைப்பார்தோழியர்கள்
நேரிழையேயம்மனிதன் நேர்மைதெரியவில்லை
காரிகையேயெங்களைமுன் கண்டோரொருவார்த்தை
பேசினானென்றே பெருமைதெரியவரும்
நேசியேயென்று நிகழ்த்தினார்தோழியர்கள் 621
தேடிவந்தோன்றன்னைத் தெரிந்தாளேமூடனென்று
சேடியேபொக்கிஷத்திற் சேக்க[illegible]ணயமதை 622

வந்தவனைத்திண்ணைதனில் வைத்திங்குவாருமென்று
சுந்தரிதோழியுடன் சொல்லியனுப்பிவைத்தாள் 623
சேடியர்கள்தானவனைத் திண்ணைதனிலிருத்தி
நாடியேவந்து நவின்றார்கள்தோழியர்கள் 624
மாத்துயர்பொன்மேனி மாறுளவனையிங்கு
கூத்தாடுமண்டபத்திற் கூட்டிவா தோழியென 625
அப்படியேயங்கே யழைத்துவரும்போது
செப்பமுடியாத சித்திரங்களைப்பார்த்து 626
பாகின்மொழிமாதரெனப் பாவைகளைத்தான்பார்த்து
மோகித்தாசைக்கடலில் மூழ்கியேநின்றுவிட்டான்
கங்குல்விடிந்து கதிரோனுதயமதில்
அங்குநின்றோனப்பா லடிபெயர்த்துவைப்பதையே
கண்டார்களந்தமுள்ள காரிகையாள்தோழியர்கள்
சண்டாளமூடாநீ தான்மோசம்போனாயே 629
பனிப்பகையோனுதயம் பார்க்கவில்லையோபாமரனே
சனிபோலவந்தவனே தான்விலகிப்போவெனவே
பழமுறத்தாலவனைப் பாரிவெகீர்த்தியுற
விழவோங்கியேயடித்து வீழ்த்திச்சிலாக்கள்பின்னும்
பிடரிதனிற்குத்திப் பெண்களவனைவிரைவில்
நடவுநடவுமென நாரியர்கள்தள்ளிவிட்டார் 632
தெருவதனில்வந்துயான் சேகரித்துவைத்திருந்த
அரும்பொருள்பொன்னாயிரத்தை ஆங்கவர்கள்தான்பறித்துக்
கொண்டார்கள்பெண்களென்று கூகூவெனக்கதறும்
மிண்டன்றன்சத்தமதை மெல்லியர்கள்தாங்கேட்டு
இத்தனைகாலம்வரை யிங்குவந்தோரிப்படியாய்க்
கத்தினதேயில்லையிவன் கத்தும்விவரமதை 635

நாமறிவோமெனவே நாரியர்களோடிவந்து
பூமனேயிங்கு புலம்புகின்றகாரணமேன் 636
வாருமெனவழைத்து மங்கையர்கள்தானுரைப்பார்
சீருருவேந்தே தெருவிலேசத்தமிட்ட 637
காரணமுஞ்சொல்லுமென்று காரிகையார்தாங்கேட்க
வாரணம்போல்மேனி மன்னவனுமேயுரைப்பான் 638
கூடியவளோடு கொஞ்சிவிளையாடுதற்குத்
தேடியபொன்னைத் தெருவிலிறைந்ததுபோற் 639
கொடுத்தேனதைவாங்கிக் கொண்டேதெருவதனில்
விடுத்தேயடித்தால் வெளியேயான்போவேனோ 640
ஞாயமில்லையோ நடுவில்லையோயிவ்வூரின்
தூயவரசனிடஞ்சொல்வேனெனமொழிந்தான் 641
கொடுத்தபொருட்கரசி கூடாளொருபோதும்
அடுத்தகவியுரைப்பே னதற்குப்பொருளுரைத்தால்
சேர்வாயெனக்கவியைச் செப்பினளோர்மாது
தார்வேந்தன்பொருளைத் தானறியமாட்டாமல் 643
நின்றான்பேய்போலவனும் நேரிழையார்தாமறிந்து
குன்றுவலிமையுள்ள கோமானைப்பின்னுமந்தப் 644
பாங்கியர்கள்கூடிப் பருத்தகழுதையின்மேல்
ஆங்கவனையேற்றி யவ்வூர்தனைவலமாய் 645
சுற்றிப்பழைய துடைப்பத்தினாலடித்துப்
பற்றினரவ்வடியைப் பட்டுமுன்னலிவரால் 646
உதைபட்டவமானமுட னூர்க்குமேபோகாமற்
சிதைபட்டங்கேயிருக்குந் தேசத்தரசரிடஞ் 647
சென்றுமுறையிட்டவனைத் தேர்வேந்தரும்பார்த்து
நன்றுச்சவளிடத்தில் நாங்களவமானமுற்று 648

செருக்குடையாளைச் செயிக்கமுடியாமல்
இருக்கிறோமெய்விதியை யெண்ணிமனதுநொந்தே
எங்களிடஞ்சொல்வதினா லெள்ளளவுமுண்டாகும்
பொங்குகடலுலகிற் பூவைதனைக்கவியால் 650
வெல்வதரிதெந்த வித்வசனர்வந்தாலும்
மல்லாருந்திண்புயனே மாமதுரைக்கேயேகிச் 651
சாதுரியமானதமிழ்ச் சங்கத்தாரிடத்தில்
நீதுரிதமாய்ச்சென்று நேரிலுரைத்துவந்தால் 652
செந்தமிழாளைச் செயிப்பரோ வெப்படியோ
அந்தமுளானேயென் றரசரெலாந்தானுரைத்தார் 653
காரிகைக்காயிரம்பொன் கட்டிடயான்பட்டகதை
ஆரிதனையறிவாரவ் விடம்யான்சென்றிடுவேன் 654
என்றவன்கோபமுடன் ஏகினன்கூடலுக்குச்
சென்றுவிரைவாகச் சேர்ந்தான்காணம்மானை 655
அடுத்தகிராமமிருந் தாயர்சிலர்பாற்குடங்கள்
எடுத்துயர்சங்கத்துக் கேகும்பொழுதிலிவன் 656
முன்னேபோய்நின்று முரடனதிகோபமதாய் [ன்
என்னடாயிக்குடத்தி லெங்குகொண்டுபோவதென்று
சங்கத்தவர்களுக்குத் தாம்போகும்பாற்குடங்கள்
துங்கனேயென்றவர்கள் சொன்னாரிவன்முனிந்து 658
சங்கமெனும்பெருமை தான்வேண்டுமோவவர்க்குப்
பங்கமிலாப்பாலைப் பருகுந்தரமுமுண்டோ 659
என்றுசொல்லிக்குடங்க ளெல்லாமுடைத்துவிட்டான்
கன்றிடையர்மனது கன்றியதிலொருவன் 660
தண்டமிழின்சங்கத் தலைவர்தமக்காகக்
கொண்டுபோம்பாலின் குடத்தையுடைத்துவிட்டாய்

நன்றெனவேயாயன் நடந்தான்றமிழோர்முன்
சென்றிடையன்நடந்த செய்திதனையுரைத்தான் 662
கேட்டுமனதிற் கிலேசமிகவாகித்
நாட்டிகமுள்ளானைத் தான்பார்க்கவேணுமென்று 663
வரும்போதுநேரிலங்கே வந்தான்விறகுவிற்போன்
அரும்பொருளையுணர்வோ ரந்தமிலானைப்பார்த்து
எமக்காகும்பாற்குடத்தை யேனுடைத்தாயெனவே
உமக்குத்தமிழ்ச்சங்கமென வுண்டோபேரிவ்வுலகில்
பலகையென்னகல்வி பகருந்திறமையென்ன
நிலைமையிலாநீரும் நிகரலவென்றெண்ணியிங்கு 666
உடைத்தேனெனவே யுரைத்தானவர்களிடம்
மிடைத்தார்புலவர் விரும்பியிங்குவந்தவிதஞ் 667
சொல்லுமெனக்கேட்கச் சொல்லுவான்மறுபடியுங்
கல்விக்குரியகொடிகட் டியுறையூரில் 668
தனக்குநிகரொருவர் தாரணியிலில்லையென்று
அனமெனும்நன்னடையா ளாங்குதமிழறியும் 669
பெருமாளெனும்பேர் பிரபலமதாய்விளங்க
இருமாநிலத்தி லிருக்குங்கவிஞரிடம் 670
முந்தியவள்பொன் முடிப்பாகவாங்கியங்கு
வந்தவரைக்கவியால் மாதும்பொருளுரைக்கச் 671
சொல்வாள்சொல்லாதவரைத் தோழிகளாலேயடித்து
வெல்வாளம்மாதால் விறல்வேந்தருங்கவிஞர் 672
அடிபட்டுநொந்தங் கவர்கள்நகர்க்கேகாமல்
பிடிபட்டமான்போற் பெருத்தவறிவிழந்து 673
பந்துசனமிழந்து பாராசர்கீர்த்தியற்றுச்
சொந்தநகரிழந்து தூயபெண்டீருமிழந்தே 674

இருக்கிறாரய்யா பிராசாதிராசரெல்லாம்
பெருக்கமுடன்வாழும் பெண்பிள்ளையைச்செயிக்கத்
தான்முடியாதவர்க்குச் சங்கமெனும்பெருமை
ஏன்வேண்டுமென்றிவனு மின்னமனேகமதாய்ச் 676
சொல்லியவன்பின்னுஞ் சொல்வானவர்களிடம்
மெல்லிநல்லாளின்னம் விவாகமில்லாதபடி 677
கன்னிகாமாடமதிற் காரிகையாளிருந்து [ன்
சின்னமில்லாக்கீர்த்தி செலுத்துகிறாளென்றுரைத்தா
சொன்னமொழியெல்லாஞ் சுருதியுணர்வோர்கேட்டு
மன்னவனேயிந்நாள் வரைநாமறிந்ததில்லை 679
எதிரிலாதிந்நா ளிருந்தோமதுரைதனில்
மதியிலாப்பெண்ணும் மதிப்புக்குறைவானால் 680
என்னபெருமை யிருக்கின்றதெங்களுக்கு
கன்றாயிருந்ததுகாண் நாம்பிழைத்தவீண்பிழைப்பு
எங்களிடமுறைநீ யிட்டதோர்காரணத்தைத்
துங்கனேசொல்லுமெனச் சொல்வானவன்பணிந்து
ஐயாநானவ்வூரில் அதிகாலவேளைதனில்
மெய்யாங்கடைத்தெருவில் விற்கவிறகைவைத்துத்
தானிருக்கும்போது தான்வந்தாளந்தவழி
கானிருக்குங்குழலாள் காறியுமிழ்ந்தாளெனையும் 684
இவனுக்கோர்பெண்டா னிசைவாளோசேருதற்குப்
புவனமதிலிவனைப் போலழகுகண்டதில்லை 685
என்றுதன்றோழிக் கியம்பினளென்றுமுதல்
குன்றுமுலையாளைக் கூடநானிச்சைவைத்து 686
ஊக்கமுளோர்மேவும் உறையூரெனுநகரில்
ஆக்கமுளவணிக ராருமகத்தில்விறகு 687

போட்டவளுக்காகப் பொன்னாயிரஞ்சேர்த்து
வாட்டடங்கண்ணாட்கு வழங்கினேன் வாங்கியெனைத்
துடிக்கவடித்துத் துரத்தினாளந்தனையும்
படித்தவரென்றிங்கு பகர்ந்தேனெனவவனுஞ் 689
சொன்னானவன்சொன்ன சொல்லையவர்நம்பாமல்
கன்னல்மொழியாட்குக் கவியொன்றெழுதினரே 690
மின்னேரிடையாய் விலைபேசிவாங்குமது
பொன்னாயிரமுண்டே போதாதே யென்னாளுஞ் 691
சற்றென்றிராதே சதிராகவாங்கியது
பொற்றொடிக்குப் போதும் புகல்வாயெனவெழுதி
இவ்விதமாய்க்கவியை யேற்படுத்தியாள்வசத்திற்
செவ்வையுடனாயிரம்பொன் சேர்த்தனுப்பினருடனே
வாங்கியவனடந்து வந்தங்குறையூரில்
தாங்குமிளமுலையாள் தையலுடவாசறனில் 694
நின்றானவனையுமே நேரிழையார்தோழியெனுங்
கன்றுறையுங்கையார் காளைதனைப்பார்த்து 695
இங்குநிற்குங்காரியமே தென்றூர்கள்தோழியர்கள்
மங்கையரேநல்வளஞ்சேர் மாமதுரைதானிருக்குஞ்
சங்கத்தாருங்கள் தலைவிதனக்காகப்
பங்கமில்பொன்னாயிரமும் பன்னுகவிதையொன்றுங்
கொடுத்தனுப்பினார்களென்று கூறினானப்போது
தொடுத்தகவியொடுபொன்தோழியர்கள்தாம்வாங்கித்
தங்கள்தலைவி தமிழறியும்பெருமாள்
மங்கையிடங்கொடுத்தார் வாசித்தவள்பார்த்துச்
சீதேவியேதெனவே செப்புவார்தோழியர்கள்
மாதேமதுரைநகர் மன்னுசங்கத்தார்கள் 700

பழுதில்லாமலமைந்த பாசுரமோராளிடத்தில்
எழுதியனுப்பி யிருக்கிறாரென்றவர்கள் 701
சொன்னதைக்கேட்டவளுஞ் சொற்பொருளையும்பார்த்துக்
கன்னியுங்கோபமுடன் கட்டினளோர்கவியை 702
ஆடைபருத்திதருமாகி லங்கொருத்தி
கோடிபருத்திதனைக் கொண்டென்செய்வாள் மூடர்
கவித்திறமையுண்டாகிற் கற்றநாற் கொண்டுலகிற்
சபிப்பரோ சங்கத்தவரென்று தானெழுதி 704
வந்தவன்றன்னிடத்தில்மங்கைநல்லாள்தான்கொடுத்து
அந்தமிகும்பசும்பொன் னாயிரத்தையுமனுப்பி 705
வைத்தாளவன்வாங்கி வந்தான்மதுரைநகர்
பொய்த்தமொழியில்லாப் புலவரிடங்கொடுத்தான்
வாங்கியதனையவர் வாசித்துப்பார்த்துடனே
தாங்கொணாக்கோபமுடன் சங்கத்தவரெழுந்து 707
வெள்ளாட்டிநம்மை விவேகமிலார்களென்று
கள்ளார்ந்தகூந்தலுள காரிகையாள்தானெழுதி 708
கொடுத்தாள்காமாட்டியவள் கொண்டகருவமதை
அடுத்துக்கெடுத்தங் கவமானஞ்செய்துபின்னும் 709
நாடறியவந்த நகரரசன்றனறிய
மூடனுக்குமாலையிட்டு மொய்குழலாளையிகழச் 710
செய்யாவிடில்நமது சீரும்பிரபலமும்
பொய்யாய்முடியுமிந்தப் பூவுலகமாமதனில் 711
செய்யகோமட்டியெச்சில் தின்றவொருகாகமது
துய்யவன்னபட்சியுடன் சூளுற்றதுபோல 712
சோழன்வெள்ளாட்டி துணிவாய்நமையுலகிற்
றாழ்வாய்நினைத்தலவோ தானெழுதினள்கவிதை 713

நாற்பத்தொன்பான்பேரும் நாமவளூர்க்கேயேகி
வேற்கணுளைக்கவியால் வெட்கமுறவேசெயித்து 714
அவள்வாழ்மனையை யடியோடேதானிடித்துப்
புவனமதிற்கீர்த்தி பொருந்தும்படியாக 715
நாம்செய்வோமென்றவர்க்கு நக்கீரர்தானுரைப்பார்
காம்புநிகர்தோளாளைக் கல்வியினாலேசெயிக்க 716
எல்லோருஞ்சென்று விழிவல்லவோநமக்கு
வல்லார்தனத்தியிடம் மன்னவரேயானேகி 717
இருமானிலத்திலுளோ ரெல்லாந்தமிழறியும்
பெருமாளெனுஞ்சொற் பெயரைவிலக்கிவைத்து 718
விவேகமிலானை விறகுத்தலையனுக்கு
விவாகமுடித்தவளை மீண்டிவ்விடஞ்சேர்வேம் 719
என்றுநக்கீர ரியம்புமொழிகேட்டு
அன்றுசங்கத்தா ரறைவார்நக்கீரருக்கு 720
அவ்வைவரத்தா லவள்மிகுகீர்த்திபெற்று
செவ்வையாங்கல்விதனிற் றீர்க்கவிற்பத்தியுற்று 721
வித்வசனராலும் வெல்லமுடியாத
தத்தைமொழியாளைத் தானெப்படிச்செயிப்பீர் 722
முத்தனேயென்று மொழிந்தாரங்குள்ளவர்கள்
அத்தனருள்பெற்றோ ரறைவானவர்களுக்கு 723
சென்றுறையூர்புக்கிச் சேயிழையைத் தான்பார்த்து
வென்றுதமிழழித்து மீளேனே யாமாகில் 724
யிருந்திருக்கவுண்ட வெறும்வலிய ரொப்பாவேன்
வருந்தாதிருமெனவே மன்னுகவியோ னுரைத்தான்
செய்யசங்கத்தார் சிவசிவாவென்றுகையாற்
றுய்யசெவிபொத்தியங்கு சொல்வார்நக்கீரருக்கு 726

அப்படியேசென்றங் கருந்தமிழாளைக்கவியால்
எப்படியும்வென்றே யிவன்றனக்குமாலையிட்டு 727
வாழும்படிசெய்து வாருமெனவனுப்பச்
சூழுமலர்ச்சோலை துன்றுமுறையூர்க்கு 728
நாடுதமிழ்க்குரிய நக்கீரர்தன்னுடனே
கூடிவிறகுவிலை கூறுபவனும்நடக்க 729
பாங்காயமைந்திருக்கும் பாதையிலோர்கானகத்திற்
றேங்குபலாவிலுப்பை தேமாபுளிமருதம் 730
அத்தியரசுகொன்றை யாத்திபிலுடையும்
பத்திரிசோதியகில் பாதிரிபாலைவீரை 731
பூவரசுபுன்னை புரசுநல்வல்காயாவுந்
தாவரமதாயிருக்குஞ் சண்பகமுமாமலகம் 732
வேங்கைகல்வித்திபன்னீர் வேலாகருங்காலி
பூங்கமுகுகோங்கு புனிதவெப்பாலைமரங்கள் 733
இடமிலாதோங்கி யிருக்கும்வனமதனில்
நடந்துபோம்போது நடுக்காட்டிலேயொருவன் 734
வட்டத்தாரியிற்படர்ந்த வள்ளிக்கொடியறுத்துக்
கட்டப்பாறையாற்கிழங்கைக் கல்லியெடுப்பதனை 735
பார்த்துநக்கீரரொரு பாவனையபாவாகச்
சேர்த்துளத்திலவைத்துச் சென்றூர்வனங்கடந்து 736
வெளியேறியேவிறகு விற்போனைத்தான்பார்த்து
அளிமுரலுங்கூந்த லழகார்தமிழறிவாள் 737
இருக்குமனையி லெதுவும்விசேடமுண்டோ
சுருக்கமுடன்விவரஞ் சொல்வாயெனக்கேட்ட 738
நக்கீரரோடுநவில்வான் விறகுவிற்போன்
அற்புதமென்சொல்வே னவள்வாழரண்மனைக்கு 739

வாசலறுபத்தொருநால் மாணிக்கத்தால்நிலையுந்
தேசுறும்வாசறனிற் சிங்கங்கரடிபுலி 740
மோடிசெய்மொன்னச்சி முதிர்கவிசொல்கன்னியருந்
தேடியநாய்குரங்கு சித்திரமண்டபமும் 741
சொல்லற்கரியவெகு சூத்திரப்பாவைகளும்
வெல்லற்கரியநல்ல வெங்கரியின்தந்தமதாற் 742
செய்தங்குவைத்திருக்குஞ் சித்திரக்கட்டில்களும்
துய்யகிணறுந்துலங்குகுருங்குமச்சேறும் 743
கன்னியர்கச்சேரிசெயுங் கல்விமிகும்மண்டபமும்
இன்னும்பலவா யிருக்குஞ்சிறப்பெனவே 744
நாதனைசொன்னார்கள் நானறிந்திலேனதனைச்
சூததனைச்செய்தே தூரத்துநிறுள்போனவனை 745
என்றவனுங்கூற வியம்புவார்நற்கீரர்
நன்றுகாணிந்த நகரத்தில்நீயேகிச் 746
செம்பருத்திமல்லிகைப்பூ சீர்கட்டெறும்புடனே
அம்பூரும்நண்டும் அரம்பைகருப்பங்கழியும் 747
என்ணெய்த்துணியு மெலுமிச்சைநற்கனியும்
வண்ணமுளவேய்நெருப்பும் வாங்கியிங்குவாருமென்றார் 748
அங்கிருந்தூர்சென் றவனுமெல்லாம்வாங்கித்
தங்காமல்நற்கீரர் தன்னிடத்திலேகொடுத்தான் 749
இருந்தவிடத்தைவிட் டெழுந்துவழிதான்கூடி
திருந்துந்திரிசிரனூர் சென்றுமேற்கேமுகமாய்ப் 750
பார்த்தார்நற்கீரர் பரிதியுதித்தாப்போலச்
சீர்த்தியுளமாடி தெரியுங்கலசமதை 751
கண்டுவிறகுவிற்குங் காளைதனையேபார்த்து
விண்டொடுமொடிதனில் மேலேதெரியுமந்தக் 752

கலசமிருக்குமிடம் காவலவன்கட்டிடமோ
சலசநிகர்வதனத் தாளிருக்குங்கட்டிடமோ 753
சொல்வாயெனக்கேட்கச் சொல்வான்நற்கீரருக்கு
வெல்லுதமிழாள் மேவுமரண்மனையென் 754
றுரைத்தானதுகேட் டுரைப்பார்நற்கீரருமே
விரைத்தடப்பொன்னிநதி மேவியழகார்ந்த 755
இதுவோசிராப்பள்ளி யீதோவுறையூரு
இதுவோதமிழறிவா ளெல்லையிதுவோநம் 756
மிறைவளர்க்குஞ்சங்க மிவளழிப்பதென்னேயான்
குறைவறவெல்வேன் குறித்தெனவேசபதம் 757
செய்துமேயங்நகர்க்குச் சென்றுசாயங்காலம்
மொய்குழலாளையவர் மோசமதுசெய்வதற்கு 758
இச்சையுளானை யிருத்தியேவோரிடத்திற்
பச்சைவடமாடையுடன் பாகைகடுக்கனுழி 759
ஆபரணமெல்லா மவன்றன்னிடங்கொடுத்துத்
தாபரமாய்மூடன் றரித்தவுடைதான்வாங்கித் 760
தலையிலிடுப்பிற் றரித்தங்கூறைங்கொடியைக்
கலைவல்லான்றன்னிடையிற் கட்டியரிவாள்சொருகி
விறகுதலையனைப்போல் வேடமதுபூண்டு
அறமுடையான்வாழை யதிலுள்ளபட்டைதனைக் 762
கட்டிச்சுமையாய்க் கனத்ததலையில்வைத்துத்
தட்டிலாக்கல்வித் தமிழறிவாடன்மனைமுன் 763
வெய்யோன்கதிரெறிப்ப வேற்கணார்பின்றொடரப்
பையவருகிறதென் பயனறியேன்றுய்யபுது 764
மலர்த்தடங்கண்வாய்ந்த மயிலனையீர்கொள்ளீரோ
விலைக்குவிறகோ விறகெனவேதான்கூறி 765

கொண்டுவருவோனைக் கோதையவடோழி
கண்டிடிவன்போலாருங் கவிசொன்னபேர்களில்லை 766
எவர்கள்வந்தாலு மெமதுதலைவிசொலுங்
கவனமதின்பொருளைக் காணாமல்நாணமுற்றுப் 767
போனவரல்லாற் பொருள்சொன்னபேர்களில்லை
ஈனனைப்போலே யிருக்கிறான்ரூபமதில் 768
எத்திசையிலுள்ளோர்க ளெல்லாம்புகழுகின்ற
வித்துவான்போலே விளங்குதிவன்வாக்கு 769
வியப்புற்றவர்களுந்தான் மெல்லிநல்லாள்தன்னிடத்திற்
பயப்பட்டுடனே பகர்ந்துகவியதனை 770
மாழையுறங்கன்னிநம் வாசறனிலேயொருவன்
வாழையின்பட்டைதனை மன்னன்றலைமீதுவைத்து
சொன்னகவியீதெனவே சொன்னார்கள்தோழியர்கள்
கன்னிகையுமோர்ந்து கவியொன்றெழுதினளே 772
உள்ளீரம்பச்சை புகையுமெறியாது
கொள்ளீர்விறகென்று கூறினீர்மெள்ளவந்து 773
வீணரேபோமுன் விறகதனையேயெடுத்த
பாணரோவென்று பகர்ந்தாள்நற்பாமாது 774
கொண்டுபோய்மாதர் கொடுத்தாரவனிடத்திற்
பண்டதும்புநாவான் பகர்ந்தானொருகவியை 775
சாலவளர்ந்ததுண்டு சாலகத்திலேபுகைபோம்
நீலவிழிமாதருக்கு நின்றெரியுமே கோலக் 776
கலைக்குள்விலையல்குற் காரிகையே கொள்ளீரோ
விலைக்குவிறகோ விறகெனவேதான்மொழிந்தார் 777
இந்தக்கவிதனைக்கொண் டேகியேதோழியர்கள்
அந்தமுள்ளாளுக்கே யறிவித்தாரப்போது 778

மாதுநல்லாள்கேட்டு மனதுமிகமகிழ்ந்து
சாதுரியமான தமிழ்த்தலைவனுக்குமிவன் 779
கன்னிகழியாமற் கடத்தினேம்நாளதனை
என்னநினைந்திவனு மிங்குவந்தகாரணமோ 780
நம்மைச்சோதிக்கவிவன் நாடியேவந்தெனது
கொம்மைமுலையிலிச்சை கொண்டிங்குவந்தானே
ஆனாற்சமத்தை யறிவோநற்கல்வியுள்ள
கானார்மலர்மார்பன் கட்டிடங்கள்தான்கடந்து 782
நம்மோடெதிர்த்து நாம்சொல்கவியதற்குச்
செம்மையுளபொருளைத் தேர்ந்துரைப்பானகிலந்தக்
கோமானைக்கூடினாற் குற்றமேயில்லையெனப்
பூமாதன்னாளும் புனைந்தாளொருகவியை 784
பால்பாயவெட்டிப் பகைமையுலர்ந்ததுவோ
கால்பட்டுவீழ்ந்துதைந்து கட்டினையோசாலப் 785
புகையுமோவுண்மை புகழ்ந்துரையாய்நீயும்
வகையாகவாசலிலே வந்தெனவேயெழுதி 786
பாங்கியிடத்திலந்தப் பைங்கிளியாள்தானனுப்பத்
தாங்கும்விறகுத் தலையனதைவாங்கி 787
முத்துநகையாளின் மூன்றாங்கட்டுக்குள்வந்து
பத்தியுளமன்னன் பகர்ந்தானொருகவியை 788
ஈரமுலர்ந்து எலும்புபோலேகாய்ந்து
சாலவெரியுமிது தையலேபோதுசென்று 789
இரவுவருமுன் இகலாமலென்னுடைய
விறகதனைக்கொள்வாய் விரைந்தேயெனவெழுதி 790
கொடியிடையாள்கையிற்கொடுத்தாரதைவாங்கி
முடிவேந்தன்தாதிமகள் மொய்குழலாளிடத்தில் 791

வைத்தார்களந்தமுள்ள மாதுநல்லாள்தான்பார்த்துச்
சித்தப்பிரமையுடன் செப்பினளோர்கவியை 792
விறகோவிறகென்று மென்மேலுமேகூறும்
விறகுவிற்பான்றன்னருகில் மேவிவிறகதனை 793
விலைகேட்டுவாருமென்று மெல்லிநல்லாள்தான்கேட்டாள்
கலைவாய்தமிழறியுங் கன்னியெனவெழுதி 794
தந்தாளதைவாங்கித் தாதியுநற்கீரரிடம்
வந்துகொடுத்திடவே வாசித்துப்பார்த்தவரும் 795
நன்றுநன்றென்று நகைத்துநற்கீரரப்போ
சென்றைந்தாம்வாசறனிற்செப்பினரோர்கவியை 796
கட்டுவிறகுவிலை கன்னியரேகூறிடுவேன்
வெட்டுவிறகதனை வீரனரிட்டதொரு 797
நறையார்குழல்மடவீர் நாணிங்குகொண்டுவந்த
விறகாயிரம்பொன் விலையெனவேகவியை 798
எழுதியேபாங்கி யிடத்திற்கொடுத்துவிட்டுப்
பழுதிலாவைந்தாம் படிவாசலைக்கடந்தான் 799
கொண்டுதமிழறியுங் கோதையிடங்கொடுத்தார்
வண்டுநிகர்கண்ணாள் வாசித்துப்பார்த்துடனே 800
நல்லகவிக்குரிய நற்கீரதேவருக்கு
வல்லமையோடோர்கவியை மாதுமறைந்தனளே 801
பச்சைமுழுது மெரியாதுபாரிடத்தில்
இச்சையிதுவென்றே வியம்பக்கேள்நிச்சயமாய் 802
உள்ளவிலைசொல்லுமென வோதத்தெரிந்துவந்து
இள்ளைகாள்சொல்லுமெனக் கீர்த்தியுளாள்தானுரைத்தாள் 803
ஆயிழையாள்தன்னுடைய வாறுவதுவாசற்
றூயவனுஞ்செல்ல சுந்தரியாள்தாதியவள் 804

கொடுத்தார்கவியதனைக் கோமானிடந்தனிலே
அடுத்தபொருள்நோக்கி யறைவாரொருகவியை 805
ஐந்நூறிரட்டிப்பொன் னப்புறமுஞ்சோறுகறி
என்னூர்விறகுவிலை யிப்படியேமுன்னேநான் 806
சொன்னபடியொழிய சொல்வதறியாப்பேதைக்
கின்னபடியென் றியம்புவீரென்றுரைக்க 807
அந்தக்கவிகொண் டறைந்தார்கள்நாயகிக்குத்
தந்திடையாள்கேட்டுமனந் தன்னில்விசனமுற்று 808
ஆயிரம்பொன்னுழி யரிசிபருப்புடனே
காயும்பலசரக்குங் கற்றுசொல்லிதன்னிடத்தில் 809
தந்துவிறகுத் தலையனிடங்கொடுத்து
இந்தனத்தைப்போட் டேகும்படியுரைத்து 810
வாருமெனவனுப்பி வைத்தாளக்கன்னிகையுந்
தாருடையநற்கூந்தற் றாதியர்கள்கொண்டுவந்து 811
அரிசிமுதற்சாமானுமாயிரம் பொன்னுங்கொடுத்து
வரிசையுளாய்விறகை வாசறனிற்போட்டுவிட்டு 812
செல்லெனவெட்டாம்வாசற் சென்றந்தக்கீரருமே
வல்லார்தனத்திதனை மன்னனருகழைத்து 813
தந்தபொன்னுங்கள் தமிழறிவாட்கேபணையம்
இந்தவரிசிக் கிடுமெசனமேவிரசப் 814
பாகனையசொல்லீர் பகருமுங்கள்பாவையர்க்குப்
போவென்றுற்கூடாது போகேனெனவெழுதி 815
தந்தனரேயங்குநின்ற தாதியர்கடம்மிடத்தில்
வந்துதமிழறியும் மங்கையிடந்தனிலே 816
பூமன்னன்சொன்னதெல்லாம் பூமாதிடமுரைத்தார்
நாமென்னசெய்வதென நாரிகவலையுற்று 817

இருந்தோமுலகில் வயதிருபத்தைந்தாகும்வரை
திருந்துங்கவியிற் செயித்தபேரில்லையிவன் 818
சொல்லுங்கவியின் றொடர்புமிலக்கணமும்
வெல்லுந்திறமையுள மிக்கதைரியமும் 819
யோசித்தால்நம்மா லொடுங்கானொருக்காலும்
தேசத்திலாருஞ் செயிக்கமுடியாதிவனை 820
ஆனாலுமின்ன மறிவோமெனத்தெளிந்து
மேனாள்விதியை விலக்கவெவராலாகும் 821
என்றுபலவிதமா யெண்ணியந்தக்கன்னிகையும்
நின்றதன்தாதியிலோர் நேரிழையைத்தானழைத்து
பொன்னதனைநமது பொக்கிஷத்திலேசேர்த்து
அன்னையேயந்த யரிசிதனைச்சமையற் 823
செய்திங்குவந்தவனைத் திண்ணைதனிலிருத்தித்
துய்யனதற்கென்ன சொல்லுகிறானெனவே 824
கேட்டுவாவென்று கிளிமொழியாளனுப்ப
வாட்டடங்கண்மாதர் வந்தவனைத்திண்ணைதனில் 825
இருமென்றுரைத்திவர்க ளெல்லோருமோர்புறமாய்
மருவார்குழலார் மறைவாயிருந்தார்கள் 826
பண்ணிறைந்தநாவானும் பைங்கிளியார்தாமுரைத்த
திண்ணைதனிலிருக்கத் தென்பாரிசமதிலோர் 827
புளியம்பனையும் பொருந்தியிரண்டுமொன்றாய்த்
தளிர்பொருந்துமம்மரத்தின் றலைமீதொருகுரண்டம்
இருந்ததனைப்பார்த்தே யியம்புவார்நக்கீரர்
வருந்தித்தனியாயிம் மரத்திலிருப்பதென்னோ 829
எம்மைப்பிரிந்தவரோ யெம்மிலுமேநாரியரோ
உம்மைப்பிரிந்தா ருரையுமெனவேயுரைத்தார் 830

இந்தக்கவிதனைக்கேட் டேகியேதோழியர்கள்
அந்தமுள்ளாளுக்கே யறிவித்தாரப்போது 831
ஓவியமன்னாளு மொன்பதாங்கட்டதற்குக்
கூவியிணையில்லானைக் கூட்டிநீர்வாருமென்றாள் 832
அப்படியேமின்னா ரழைத்தங்குவந்தார்கள்
செப்பினாரங்குநின்று செய்யுளொன்றுமேதெளிவாய்
ஊசிமுனையி லொளிமுத்துக்கோர்த்ததுபோல்
வீசுபனியாலென் மெய்க்குளிரினால்வாடி 834
முலைத்தடங்கண்மாதே முன்வினையோயென்றனக்கு
நிலைக்கடையோநிச்சயித்தாய் நீதானெனவவரும் 835
சொன்னதைக்கேட்டுத் துரிதமுடனங்குநின்ற
கன்னியர்கள்தானோடிக் காரிகையாளிடத்தில் 836
சொன்னாரதனையுமே தோகைநல்லாள்தான்கேட்டு
மன்னவனையப்பால் வரவழைத்தேயோரிடத்தில் 837
வைக்கோறனைவிரித்து வைத்துப்படுக்கையதாய்த்
தூக்கோன்றனையுஞ் சயனிக்கச்சொல்லுமென்றாள் 838
பைந்தொடியாள்சொன்ன படியேயவரமைத்துச்
சுந்தரனைப்படுக்கச் சொன்னார்கள்தோழியர்கள் 839
பையநடந்தவரும் பத்தாங்கட்டுக்குள்வந்து
துய்யவதனனங்கு சொன்னானொருகவியை 840
வைக்கோற்சயனத்தில் வாரியமுன்றானையின்மேல்
மெய்த்தோல்வருந்தி மெலிவுற்றுடல்வாட 841
மதுவொழுகுங்கொன்றை வார்சடையோனிற்றைக்கு
இதுவோவிதித்தா ரெனக்கேவெனமொழிந்தார் 842
அங்கதனைத்தோழி யறிவித்தாள்நாயகிக்கு
மங்கையதைக்கேட்டு மாதர்களுக்கேயுரைப்பாள் 843

மருவார்குழலீர்காள் வைக்கோற்றலையணையுந்
தருவிற்பனைபோலே தனிப்பாயொன்றுங்கொடுத்து
பார்த்திபனைநமது பதினொன்றும்வாசறனிற்
சேர்த்தவ்விடம்படுக்கச் செய்யுங்களென்றுரைத்தாள் 845
அப்படியேபடுக்கை யங்கேயமைத்துவைத்துச்
செப்பினார்கல்வித் திறமையுடையோன்பார்த்துச் 846
சரசரத்தபாயுந் தலையணைக்குவைக்கோலும்
பரபரத்தமச்சினிமார் பண்பும்விரகுடனே 847
சங்கிவர்கள்செய்யும் இயல்புமிவர்நலமும்
நீங்காதென்னெஞ்சத்துள்நின்றெனவேதானுரைத்தார்
கிளிபோலவேமொழியுங் கிண்ணம்போலேதனமும்
அளிசேரளகமு மருந்தமிழ்மேலதிரமும் 849
காளையரினுள்ளங் கவருமெழிலுடம்பும்
வாளைநிகர்கண்ணும் மதிபோல்முகத்தழகும் 850
பார்க்குள்மதிப்புமுள்ள பைந்தமிழாளிடத்தில்
தீர்க்கமுடனோடிச் செப்பினார்தோழியர்கள் 851
அன்னமனநடையா ளப்போதவர்க்குரைப்பாள்
கன்னியரேபன்னிரண்டாங் கட்டுக்குள்ளேயழைத்து
கத்தத்தலையணையுங் காரிகையீச்சம்பாயும்
வந்தவனுக்கே வழங்குமெனவுரைத்தாள் 853
நங்கைமொழிப்படியே நற்கீரர்தன்னிடத்தில்
கொங்கைமின்னார்பாயைக் கொண்டுவந்துதான்கொடுத்தார்
வாங்கிவிரித்தந்த மன்னனதிலேயிருந்து
பாங்கியர்கள்கேட்கப் பகர்ந்தானொருகவியை 855
குடவன்கடிக்கக் குளிர்வாடைதான்வீசக்
கிடவென்றிடத்தே கிடந்தேன் மடமொழியாள்

மென்குறங்கைத்தீண்ட விதியில்லையாதலினால்
என்குறங்கைத்தழுவினே னென்றிவர்புகன்றார் 857
என்றவர்சொல்கவியை யேந்திழையார் தான்கேட்டு
அன்றவர்சென்றங் கறிவித்தார்நாயகிக்கு 858
இன்பமுளான்கவியி லீஸ்பரனேயற்பனல்ல
என்புகழைக்கெடுக்க விங்குவந்தா னென்றுளத்தில்
எண்ணியம்மாதங் கியம்புவாள்தோழியர்க்குப்
பண்ணிறைநாவானைப் பதின்மூன்றுங்கட்டிடத்தில்
நாற்கட்டிலொன்றதனில் நல்லீச்சம்பாய்போட்டு
வேற்கணுடையதிரு மெல்லியரேநீர்விரைவாய்க் 861
கூட்டிவந்தந்தமுள கோமான்றனையும்வைத்து
ஆட்டமிகுந்த வழகுபெருமானை 862
சிங்காரித்தந்தமலி சேயிழையைத்தானனுப்பி
மங்காதகீர்த்திபெற்ற மன்னவனையவளும் 863
சேரும்படியாகச் செய்யுமுபாயமதைப்
பாருமெனவே பகர்ந்தாள்தமிழ்மாது 864
கட்டிலும்பாயுங் கடவதனிலேபோட்டு
அட்டியில்லாமலங்கு ஆடும்பெருமானை 865
போகும்படியனுப்பிப் போனார்கள்தோழியர்கள்
வாகுபெறுங்கவிஞன் வந்தவளைத்தான்பார்த்து 866
தறிபோலுங்குண்டத்தாய் தானவளைப்போலே
நெறியாகவந்தென்முன் நின்றாய்சிறுபுலிதான் 867
நீராப்பசியுறினுந் தின்னுமோபுல்லதனை
நேராகநில்லாதே நீபோயெனவுரைத்தார் 868
கேட்டுமனதிற் கிலேசமிகவாகி
வாட்டமுடன்மங்கை வந்துதலைவியிடம் 869

அங்குநடந்ததனை யாயிழையாள் தானுரைக்கச்
சங்கையிலாமனதிற் றனேவிசாரமுற்று 870
பாங்கியரேசென்று பதினென்காங்கட்டிடத்திற்
றுங்குகச்சைக்கட்டிற் றனிலீச்சம்பாய்போட்டு 871
புவிவேந்தர்போற்றும் புரவலனையங்குவைத்துக்
கவிவேந்தன் முன்னமது காரிகையார் தங்களிலே 872
இன்பந்தருமாதிரத மொழி மோகினியை
அன்பாகத்தானே யனுப்புமெனவுரைத்தாள் 873
சேடியர்கள் தானவளைச் சிங்காரித்தேயனுப்ப
ஆடியனகன்னத்தா ளிங்குவரும்போதிருந்த 874
தீப்பிருண்டெரியச் சேயிழையாள் தானதனைச்
சோபமுடன்றாண்டித் துடைத்தாள் தலைதனிலே 875
அப்போநக்கீரரறிந்தார் வெள்ளாட்டியென்று
செப்புவாரந்தத் தெரிவைதனைப்பார்த்து 876
சுள்ளிவிறகுச் சுமைத்தலையனுனலுந்
தெள்ளுதமிழாளைச் சேராமலுள்ள மெய்யிற் 877
செழும்பாகிலுமினிய தேன்சொலாய் கூடாதே [தாக்
தொழும்பாமுன்னுச்சியுடன் சொல்வாயெனமொழிக்
இந்தக்கவிகேட் டிறங்கித்தலைகவிழ்ந்து
சிந்தைவேறாகித் திகைத்துமுகம்வாடி 879
தந்திடையாள்வந்து தமிழறிவாடன்னிடத்தில்
சிந்தைவருந்திமிகச் சென்றவிவரமெல்லாம் 880
மாசற்றயூகமுள்ள மங்கைநல்லாள் தானுரைத்தாள்
தேசுற்றமாதுடனே செப்புவாள் தோழியிடம் 881
அன்னவனைப்பதினேந்தாகு நங்கட்டிடத்தில்
மன்னவனைச்சப்ர மஞ்சமதிலிருத்தி 882

தேன்மொழியாள்மதன சேனைதனக்கிப்போது
மான்மதம்பன்னீர் மலர்களிவையணிந்து 883
பூமறையாள்வாணிமகிழ் பொற்கொடியாள்தனது
சாமரைகாளாஞ்சி தங்கமிதியடியும் 884
பாங்கிதனக்குவன்னப் பட்டாடையுங்கொடுத்து
ஆங்கவளைநீங்க ளனுப்புமெனமொழிந்தாள் 885
வேயன்னதோளார் விறகுதலையனையும்
நாயகிசொற்படிக்கு நாற்காலிமீதுவைத்து 886
தாதிமதனசேனை தன்னையலங்கரித்து
ஓதினியமின்னா ருடனேயனுப்பிவைத்தார் 887
ஊழியப்பெண்ணென்றே வுத்தமனுந்தான்தெரிந்து
பாழியந்தோளான் பகர்ந்தானொருகவியை 888
ஆடையுடையு மவள்கால்மிதியடியும்
மோடியவளாக முன்னின்றாய் மாடதுபோல் 889
குண்டனையான்சேர்வேறோ கோதைகாள்செய்திதனைக்
கண்டேன்கண்டேனுன் கணக்கெனவேயுரைத்தார்
என்றிவருஞ்சொல்ல வேந்திழையாள்தானுணர்ந்து
சென்றங்கரசியிடஞ் செப்பினாள்கேட்டவளும் 891
சிதைபட்டுலகிற் றிரிந்தலைந்தோன்றனக்குப்
புதையல்கிடைத்த புதுமைபோலாச்சுதிவன் 892
இத்தனைகாலம்வரை யிந்தனத்தையேசுமந்த
பித்தனுக்குப்பெண்டாய் பிறந்தேனோயான்பாவி 893
தாதியரேசமைத்த சாப்பாடுபோடுமினி
யீதிலென்செய்வோம் விதிப்படியேயாகுமென்று
மாதுதமிழறிவாள் மங்கையருக்கேயுரைக்கச்
சாதுரியமான தலைவன்றனையழைத்து 895

நல்லாவிலேதைத்துக் கன்னியர்களப்போது
வல்லாளனுக்கங்கே வைத்தார்கள்சாதமது 896
வெந்துவேகாதுமியும் மிக்ககல்லுநெல்லுமதாய்
தந்திடையார்வைத்த சாதமதைப்பார்த்து 897
மல்லலந்தாரான் வழங்கினோர்கவியை
கல்லொன்றுநெல்லிரண்டு காணுமணலரிசி 898
நல்லேயுடனஞ்சுவகை காட்டினேன் வில்நுதலாய்
வல்லபடிசெய்த வகையெலாமுங்களது 899
முல்லைநகையாட்கு மொழியுமெனவுரைத்தான்
கல்வியறிந்தோனிலேயிற் கையதனைவையாமல் 900
அசனமதனை யருந்தாமற்றள்ளிவிட்டு
விசனமுடனின்ற மெல்லியரைத்தான்பார்த்தார் 901
தானேதலைகவிழ்ந்து தாதியர்கள்வேகமுடன்
தேனார்மொழியாட்குச் செப்பினார்செய்கையெலாம்
கச்சேரிக்குள்ளந்தக் காவலனைத்தானழைத்துக்
கச்சேறுங்கொங்கையுள்ள கன்னிகாள்வாருமென்முன்
அந்தப்படியே யழைத்தார்கள் தோழியர்கள்
சிந்தைமகிழ்வாகச் சீமான்வரும்போது 904
பத்தியுளமாதின் பதினேழாங்கட்டதற்குள்
சுத்தமாய்ச்செய்திருந்த சூத்திரநற்பாவைகளும் 905
அப்போதவனையங்கே யாகடியஞ்செய்வதற்குச்
செப்பமுடன்வரவே தெண்டினலேயடித்தார் 906
கம்படியாற்பொம்மை கலைந்துவிழுந்திடவே
வம்பமருந்தாருடையாள் வாசல்பதினெட்டில்வந்து
எறும்பொழுதி லிருபக்கத்தேயிருந்து
வீறுளவெம்புலிகள் மேலேவிழவரவே 908

க்ஷேமமுளநக்கீரர் செம்பருத்தம்பூவதனைக்
காமமிலான்போடக் கறியெனவேமோந்து 909
கடித்துப்பின்போகக் கவிஞோனதுகடந்து
படிக்குள்ளுயர்ந்திருக்கும் பத்தொன்பதாம்வாசல்
கல்விமானங்கேகக் கரடியிரண்டவரைப்
பல்லுற்றவாய்திறந்து பாயவரும்போதிலவர் 911
காந்தக்கல்லையெடுத்துக் கற்றூணிலேயடித்தார்
பூந்தநெருப்புப் பொறிகண்டதுபயந்து 912
ஏகவரு மிருபதாம்வாசல்வர
வேகமுடன்றாவி வெங்கரிகள்கோபமுடன் 913
சோடாயிரண்டங்கே தும்பிக்கையைநீட்டிக்
கோடார்ந்தயானைகளுங் கொல்லநினைந்திவர்முன் 914
வந்ததைத்தான்பார்த்து மகிழ்ந்துகருப்பங்கழியைத்
தந்தாரதைவாங்கித் தந்திகளுமேவிலக 915
இங்கிதமான விருபத்தோராம்வாசற்
சங்கத்தலைவனுமே தான்வரவேயோரிரண்டு 916
குரங்குகள்சீறிக் குதித்தவைகள்தான்வரவே [வே
கரங்குலவுநன்டெறும்பைக் கல்வியுளான்முன்னிட
கண்டுபயந்து கவிகள்விலகினதால்
தண்டமிழானப்பாற் றண்டியிருபத்திரண்டாய் 918
கூடவில்வந்தாரங்கு கடிநாயிரண்டுவரத்
திடமுடையான்மலனைச் செந்நாயின்முன்போட்டார்
சுணங்கனதைப்பார்த்துச் சோறெனவேதானுகர்ந்து
பிணங்கியதுநிற்கப் பின்னிருபத்துமூன்றாம் 920
வாசறனிற்கூடமதை மன்னவனுமேயறிந்து
பாசமிலான்றாண்டியப் பாலேதான்செல்வதற்குப்

பார்க்கும்பொழுதில் பலகையொன்றுதான்மேலே
சேர்த்தங்குசூத்திரத்தாற் செல்வோர்தலையில்விழ
வைத்திருக்குஞ்சூதை மன்னனறிந்துடனே
புத்தியுளானோர்கல்லைப் போட்டான்கிணறதனில் 923
பலகையறுந்து படீரெனவேவிழவே
புலவன்மகிழ்ந்து புறப்பட்டான்கூபம்விட்டு 924
வந்திருபத்துநாலாம் வாசறனிலேநுழைந்தார்
சிந்தைமகிழ்குங்குமத்தின் சேறங்குமாயிருக்க 925
எண்ணெய்த்துணிகொண் டிருகாலிலுந்தடவி
அண்ணல்கடந்துமெல்ல வக்கரையுமேதாவி 926
முன்னவனுமேயங்கோர் மூங்கிற்பிளவதனாற்
றன்னடியிற்பட்ட தனிக்குங்குமச்சேற்றை 927
வேந்தனுமேதுடைத்து வெள்ளித்தாம்பாளமதிற்
பாந்தமுளாள்வைத்த பன்னீராழாக்கதனில் 928
பாதமதைப்பாதியினாற் பாவலன்றான்கழுவி
மீதமுளபன்னீரை மின்னாரிடங்கொடுத்து 929
மட்டார்குழலியுங்கள் மங்கைதலையிலிதைக்
கொட்டுங்களென்று கொடுத்தவ்விடத்தைவிட்டு
வந்திருபத்தைந்தாம் வாசறனிலேநுழைந்தார்
சிந்தைமிகமகிழுஞ் சித்திரமண்டபத்தில் 931
பாரோரதமான பாரதம்ராமன்னுடைய
சீரோங்கும்நற்கதையைச் சித்திரத்தாலேயெழுதி
இருப்பதனைப்பார்த் தேகும்பொழுதிலங்கு
மருக்கமழுங்கூந்தல் மடவாரவரிடத்து 933
சித்திரத்தின்சிறப்பைச் சீமானேபாருமென
அத்தருணத்தி லறைவார்நற்கீரருமே 934

கலைகாட்டுங்தோகைக் கருஞ்சக்கரத்தினிய
வலைகாட்டியாயிரம்பொன் வாங்கிக்கலைகெகிழாக் 935
குத்திரமாய்த்தேடுங் குறிபோலிருக்குதிந்தச்
சித்திரஞ்செய்யுஞ் செயலென்னவேயுரைத்தார் 936
சுந்தரஞ்சேர்மாதர் சொன்னார்கள்நாயகிக்குப்
பைங்தொடியாள்கேட்டுப் பகர்வாளவருடனே 937
சீக்கிரத்தில்வந்து சேருமெனவுரைத்தாள்
ஆக்குகைசெய்வோர்வந் தழைக்கவிவரெழுந்து 938
மாதரொடும்வந்து மன்னுமிருபத்தாறும்
நீதமுளவாசல் நீராழிமண்டபத்தில் 939
தெப்பத்தின்மீதேறிச் சென்றுகரையில்வந்து
அப்பாலிருபத்தே ழாகுங்கடவதனில் 940
பளிங்குமாமண்டபத்தைப் பார்த்தங்கதிசயித்துத்
தெளிந்தோர்வரைந்திருக்குஞ் சித்திரத்தையேநோக்கி 941
வருவார்களாகில் வழுக்கிவிழுந்துடலந்
தருகாதுருண்டு தமதுதலையுடைந்து 942
அவமானமுற்றோ ரனேகரம்மண்டபத்திற்
றவமாருமன்னவனுந் தாண்டிவுபாயமதாய் 943
இயலறியுநல்ல விருபத்தொன்பான்வாசல்விட்டு
மயல்செய்யிசை பயிலும் மண்டபமுந்தான்கடந்து
முனிவனங்கேசென்று முப்பத்தோராம்வாசற்
றனியாகுங்கூத்ததனைத் தான்பார்க்குமண்டபத்தில்
சேவலைவிட்டுச் செருச்செய்யப்பார்ப்பாரும்
ஆவலுடன்கோடா ரஜத்தின்போர்பார்ப்பாரும் 946
தன்னுமைகொட்டநல்ல தாளமதற்கிசைத்துப்
பண்ணிசையோடேமாதர் பாடிநடித்தவர்முன் 947

வங்கெதங்கள் கூத்தையுமே மன்னுநீர் பாருமென்று
கொங்கார்குழலார்கள் கூத்தாடவேமுயன்றார் 948
பொழுதுவிடிந்துமே போகுமெனநினைந்து
பழுதிலாமன்னன் பகர்வானவர்களுக்கு 949
பாகினியசொல்லார்ந்த பாவையரோயுமது
நாகரிகமுடைய நாட்டியத்தையும்பார்த்து 950
சம்மானமுங்கள் தலைவிசெய்வாளேயொழிய
எம்மால்முடியா தெனவேயவிடம்விட்டு 951
பாவலவன்செல்லப் பாங்கியர்களோடிவந்து
காவலவனும்நமது கச்சேரிமண்டபத்தில் 952
வந்தானெனவே வழுத்தினார்நாயகிக்குச்
சந்தோடமாகியவள் தாதிதனக்கேயுரைப்பாள் 953
காவலனைத்துங் கடந்தவரும்வந்ததினால்
தேவனிவனென்று தெரிவையுமண்டபத்தை 954
விட்டெழுந்துசென்றாளே மேகமன்னதாழ்குழலாள்
கட்டழகன்வந்த கச்சேரிமண்டபத்தில் 955
அம்பொன்மணித்தூ ணறுபத்துநான்குளதாய்ச்
செம்பவளப்பலகை சேர்த்துமணிபதித்து 956
பளிங்குவால்சேட்டுகளும் பச்சைக்குளோப்பரொடு
தெளிவாய்க்கடைந்தெடுத்த சித்திரக்காற்கட்டிலுடன் 957
குத்துவிளக்குங் குலுங்குஞ்சரவிளக்குஞ்
சித்திரங்களாகநன்றாய்ச் செய்தசெடிவிளக்குஞ் 958
தங்கத்தினாலே சமைத்தசதிர்விளக்கும்
அங்கேயழகா யமைத்தபன்னீர்ச்சொம்புகளும் 959
சுருட்டாலழகாகத் தொங்கவிட்டபங்காவும்
இருட்டெலாம்போக்கு மிரவியுதித்ததுபோல் 960

நீங்காதெப்போதிருக்கும் நீலமணிவிளக்கும்
பாங்கானவூது வத்தியதின்வாசம் 961
எங்கும்பரிமளங் ளேமிகுந்ததைநோக்கி
அங்கேயழகா யமைந்திரண்டுகட்டிலது 962
சோடாயிருப்பதனைச் சுந்தரனுமேபார்த்து
ஈடில்லாக்கட்டில் எலுமிச்சநற்கனியை 963
வைத்தாலுருண்டு வருவதைக்காற்புறமாய்ப்
பொய்த்தமொழியில்லாப் புலவனறிந்துடனே 964
ஆலைப்புறங்கண்ணாடி தானிருப்பதைப்பார்த்துக்
கலைவலானேறியதிற் கந்தையொன்றைத்தான்விரித்து
படுத்தாரிருந்த பதுமையெலாமவர்க்கு
அடுத்தேவல்செய்ய வகத்தில்நினைந்துடனே 966
ஆடியெடுத்தொன் றவரிடத்திலேகொடுக்கும்
நாடிகைகாலதனை நன்றாய்வருடுமொன்று 967
வெண்சாமரமெடுத்து வீசுமொருபதுமை
தண்சந்தனத்தைத் தடவுமொருபதுமை 968
பண்பாடுமன்னனுக்குப் பாங்காய்ப்பணிவதனைக்
கண்டார்களந்தமுள்ள காரிகைதோழியர்கள் 969
தங்கடலைவி தமிழறிவாள்தனக்கு
மங்கையர்கள்தானோடி வந்துசொன்னார்களதை 770
கேட்டுமனதிற் கிலேசமிகவாகி
வாட்டடங்கண்மாது மனதுதெளிந்துடனே 971
பூமிதனில்நல்ல புலவனிவனாகையினால்
நாமிவனைக்கூடுவது ஞாயமெனவேயுணர்ந்து 972
ஆனாலுமின்ன மறிவோமெனவேதான்
மானாளியலறியும் மங்கைதனையழைத்து 973

தன்னுடையநகைக டன்னையலங்கரித்து
மின்னேயவனையிப்போ மேவிநீவாவெனவே 974
மெல்லிதனது விருதுடனேதானனுப்ப
வல்லியுமந்தமிகும் மன்னனிடத்தருகே 975
செந்திருமாதன்ன தேவிதன்னுசையெனுந்
தந்தாபந்தீர்க்கவந்த தையறனையேபார்த்து 976
முத்துநகையோடும் முன்முலையும்மெய்ஞ்ஞானச்
சத்திசிவம்போலத் தாதியராம்மெத்தெனவந் 977
தன்புருகாநெஞ்சத் தவரிருக்கநீவரலேன்
பொன்சிலம்புசிற்றடியாய் போவாயெனவுரைத்தார்
மன்னனுரைநாராசம் வார்த்ததெனக்காதிலுறக்
கன்னிகவலையுடன் கண்டாள்தன்னையகியை 979
நற்கீரதேவர் நவின்றதெலாமுரைத்தாள்
ஆற்பூறுங்கன்னி யறிந்துதனதுளத்தில் 980
இனியாஞ்செய்தந்திரங்க ளேதுறதவனிடத்திற்
றனியாகும்மன்னனிடந் தான்செல்லவேநினைந்து 981
தாதாடுங்கூந்தலுள்ள தையல்தன்றுயிடத்தில்
மாதாவேவந்த மனிதனிடந்தனக்கு 982
அனுப்பினபேறை யவமானஞ்செய்துவிட்டான்
இனியான்மிதமா யிருக்காமலேகுதற்கு 983
நல்வாக்கெனக்கு நவில்வாயெனக்கேட்டாள்
அல்லாருங்கூந்த லனமேபெண்ணுயகமே 984
காசினியில்விறகு கட்டிவிற்போனிடத்திற்
றேசிலுயர்மாதேநீ செல்வதுவுந்தானழகோ 985
கல்விமானென்று கடல்சூழ்புவியதனிற்
செல்வநீபெற்றிருக்குஞ் சீருமழிந்தேவுடனே 986

நாட்டார்தனக்கு நகைப்புக்கிடமாகாமற்
கேட்டாரிகழ்ந்துவுன்னை கேவலஞ்சொல்லாதபடி.987
நாட்டியப்பெண்கள்தமை நன்றாயலங்கரித்துத்
தேட்டமுடனவன்முன் செல்லும்படியனுப்பி 988
சதிர்செய்யச்சொல்லித் தலைவன்றனைமயக்கிக்
கதிருதயங்கண்டு கடவில்விடாதபடி 989
விரட்டியவனை வெளியிற்றுரந்தாமற்
திருட்டுப்பயலிடத்திற் செல்வதுவுந்தானழகோ 990
என்றுதன்தாயாரியம்புமொழியைக்கேட்டுக்
கன்றுதொட்டகையாள் கழறுவாள்தாய்தனக்கு 991
பூமாந்தர்போற்றும் புலவர்வருமிடத்தில்
ஏமாந்தால்நாமவனை யேகும்படியேசெயலாம் 992
இலக்கணமிலக்கியங்க ளெல்லாம்படித்தவனை
விலக்குவதெவ்வண்ணம்விதியின்படியேநடக்கும்993
கல்லாவொருவன்றன் சேர்தலினுங்கற்றவனோ
டல்லற்படுவ தழகன்றேசொல்லாய்நீ 994
கரும்பின்ரசங்கைக்குமோ கல்வியறிகோதாய்
விரும்புவரோவேம்பின் கனியதனைமேலோர்கள் 995
என்றுதன்தாயார்க் கிதமுறைத்தாளதன்பின்
நன்றுபோய்வாவெனவே நல்வாக்களித்தனளே 996
செந்தாமரைமுகத்தாள் சென்றாள்நீராடுதற்குக்
கந்தமமர்கூந்தற் கன்னியுமேநீராடி 997
கொச்சிமஞ்சள்பூசிக் குளித்துடம்பைத்தான்துவட்டி
நச்சுவிழியாள் நகைகளெல்லாங்கழற்றி 998
தாதிநகைவாங்கித் தானேயலங்கரித்து
நீதியுளபொற்கொடியாள்நெற்றியில்வெண்ணீறணிந்து

கண்ணுக்குமையெழுதிக் கஸ்தூரிப்பொட்டுமிட்டு
மண்ணுக்குளாரும் மதிக்கும்படியாயிருக்கும் 1000
மிக்ககல்விமாதுமுயர் வெள்ளைநிறச்சேலைகட்டித்
தக்கதனதிடமார் தாதிபோல்வேடமுற்று 1001
மாறியிசையறியும் மங்கையனைமுன்னடத்திக்
காரிகையாளடைப்பக் காரியெனவேதான் 1002
நாகசுரம்மேளம் நடனமிடுபெண்களுடன்
பாகினியமென்மொழியாள் பக்கந்தனிலேயொதுங்கி
அடைக்காயிசையறியும் அன்னந்தனக்கேயீந்து
கடைக்கண்ணாலேபார்த்துக் கன்னிவருவதனை 1004
கொடிபோலிடையுங் குளிர்மதிபோலேமுகமும்
பிடிபோல்நடையும் பிறைவடத்தின்னழகும் 1005
பருவமதன்விற்போற் பருத்தபுருவமிரண்டுந்
திருவெனப்பின்வந்த செல்விதனையேகீரன் 1006
கண்டாரவளைக் கலையறிவாளெனவே
தண்டமிழ்ச்சங்கத் தலைவனவளைப்பார்த்து 1007
கருகவிழித்தவ்விழியாற் காமனுடலன்றெறிந்து
உருகவிழித்த விழியோவுவமையிலாக் 1008
குருகுபதத்தினிளங் கொங்கைமின்னையேகூடிப்
பருகவிதித்திலனே பாவிகாமநோய்தணிய 1009
என்றுநக்கீர ரியம்புமொழியதனைக்
குன்றுபோலேபருத்த கொங்கைமின்னாள்தானறிந்து
தாதிதனைப்பெண்யானைத்தந்தக்கட்டின்மீதுவைத்து
கோதிலாமங்கை கொடுத்துநின்றாளடைக்காய் 1011
அப்பொழுதிந்தனத்தா னன்னாள்தன்சூததனைச்
செப்பமுடனறிந்து சீக்கிரமாய்த்தானெழுந்து 1012

கன்னியேநீசெய்யுங் கபடமதையானறிவேன்
அன்னமேயிந்த வடைக்காயைத்தான்மடித்து 1013
நீயிப்போகல்லெனக்கை நீட்டினார்கீரருமே
ஆயிழையாளப்போ தவர்முகத்தையேநோக்கி 1014
காவலனேயானோர் கவியுரைப்பேனதற்கு
மாவலனேநீர்பொருளை மன்னும்படியுரைத்தால் 1015
மன்னுவுன்கையடைக்காய் வாங்குவேனென்றுரைத்தாள்
பன்னூற்றிறமுடையாள் பைங்கொடியைப்போலிடையாள்
செப்பன்னமென்முலையாள் செப்புமொழியைக்கேட்டு
அப்போதுகீர ரறைவாரவளுக்கு 1017
பைங்கிளியேயானும் பயனுரையேனுமாகில்
இங்குனக்காறுமாத மேவலாளாகிடுவேன் 1018
தாதுறையுங்கூந்தலுள்ள தையலரேநீதோற்றால்
ஏதுவகைசொல் லெனவேயிவர்கேட்க 1019
தேவரீர்சொன்னபடி செய்வேனெனவுரைத்தாள்
பாவலனுங்கவியைப் பண்பாய்ப்பகருமென்றார் 1020
தையலாள்தந்தத் தனிக்கட்டிலின்னடுவே
துய்யதிரையிட்டுச் சுருண்டகுழலணங்கு 1021
மிக்கதமிழறியும் வேடமதற்கிணங்க
மைக்கண்ணுக்கிட்டுமெருங்கிலொட்டியாணமிட்டு 1022
அளகமதில்முல்லை யணிந்துசவ்வாதுடனே
களபமுடனேயவளுங் கஸ்தூரிப்பொட்டுமிட்டு 1023
மார்பதனில்முத்து மாலையுடன்கண்டசரங்
தார்குழலாள்கைக்கடகந் தன்னைக்கரஞ்சேர்த்து
கோதைதன்காதினிலே குண்டலங்களும்மணிந்து
பாதமதிற்சிலம்பும் பாடகமுந்தான்பூண்டு 1025

அரிவையிசையை யறியும்பெருமாளை
புரிசையுயர்மாளிகைக்குப் போகவிடைகொடுத்து
காரிகையாள்தந்தத்தின் கட்டிலின்மீதிருந்து
பாரிசத்திலேகவரி பாங்கியர்கள்தான்வீச 0127
நாடுங்கல்விக்குரிய நற்கீரதேவரிடந்
தேடுமதுரமொழியாள் செப்பினளோர்கவியை 1028
ஐயைந்திருபத்தைந் தோரிரவேயான்பெறினும்
வெய்யமதனைந்துகணை மேல்வரினுந்தையலர்கள் 1029
கையஞ்சறியாத காளைதோள்சேர்வாளோ
மெய்யஞ்சறப்பெற்றீ மின்னனவேயுரைத்தாள் 1030
நாட்டிலிருப்பதைந்து நகரின்பொருள்களைந்து
காட்டிலிருப்பதைந்து கடலிலிருப்பதைந்து 1031
மங்கையரோவோங்கும் மலையுளிருப்பதைந்து
கொங்குறையுங்கூந்தற் கோதையேயென்றுரைத்தார்
அடக்கமுடன்சொன்னா லறிவதெவ்வண்ணமதைத்
திடத்துடனேவிரித்துச் செப்புமெனவேயுரைத்தாள்
அரக்கிறால்செந்தே னணிமயிலினற்பீலி
திருக்கற்றநாவி செறியும்வனத்துளது 1034
ஓங்குவளைதரள மொக்கோலைநற்பவளம்
பாங்குபெறுமுப்பும் பரவைதனிலுளது 1035
செந்நெற்சிறுபயறு சீராருஞ்செவ்விளநீர்
நன்னயவாழைகன்னல் நாட்டிலுளதுபெண்ணே 1036
கண்ணாடிபித்தன் கருங்குரங்குகாரானை
மண்ணாளும்வேந்தன் வளஞ்சேர்நகருளது 1037
கோட்டமகின்மிளகு குங்குமத்தக்கோலமைந்தும்
வாட்டமில்லாமல் மலையிலுளதாகும் 1038

கன்னிநீசொன்ன கலைகளுஞ்சாவதுகேள்
முன்னோர்களான முனிவரையுந்தான்மயக்கும் 1039
முல்லையசோகு முழுநீலஞ்சூதமுயர்
அல்லிமலரோடே யைந்தெனவேயுரைத்தார் 1040
கையைந்தெனவே கவியிலுரைத்தனைநீ
மெய்யாம்பொருளை விரித்துரைப்பேணீகேளாய் 1041
எண்ணலெழுதல் இலைகிள்ளல்பூத்தொடுத்தல்
பண்யாழோடைந்தெனவேபகர்ந்தார்நக்கீரருமே
மெய்யைந்தெனவே விளம்பினாய்செய்யுளதில்
தொய்யின்முலையாளே சொல்வேனதைக்கேளா 1043
கொட்டாவிநெட்டை குறுகுறுப்புக்கூன்குருடும்
நட்டுயிழுதலென்று நவில்வார்கள்மேலோர்கள் 1044
என்றுநக்கீர ரியம்புமொழிகேட்டு
நன்றெனவேதமிழின் நாயகியுமேயுரைப்பாள் 1045
பாய்ச்சிமறுத்திடுவார் பாதமோநான்குடையார்
வாய்ச்சகளம்புகுந்து வாழ்ந்திருப்பாரோவீச்சிப் 1046
படைவாணர்தங்களுக்குப் பாரின்மேற்காணாத
அடைமாவுமல்ல வருள்வீரெனவுரைத்தாள் 1047
கம்பைபலவைச்சுடியிற் கால்களொருநான்குளதாய்ப்
பைம்பொற்களமேறிப்பாய்ச்சுதலாலெம்பெரிய 1048
மாவல்லநல்ல மரக்காலேமானிலமன்
பூவலருங்கோதாய் பொருளாகுமென்றுரைத்தார்
அங்காடிகொள்ளப்போய் யானைதனையங்குகண்டேன்
சிங்காரமாயிருக்குந் தேரிவுளியான்பார்த்தேன் 1050
மங்காதகீர்த்தியுறும் மன்னரொடுமெற்றுமுள
சங்கிலாவீரமிகுங் காலாளையங்குகண்டேன் 1051

வீரரிருவரெதிர் வெட்டிடவேயான்பார்த்துச்
சாரமிலாதென்றலையைத் தாழ்த்தினேனீதுரைப்பாய்
என்றுதமிழ்மா திசைத்தகதையைக்கேட்டு
வென்றியுளானும் விடுவிப்பானப்போது 1053
வம்பமருங்கோதாய் வாசறனிலானையுண்டு
அம்புவியுமில்லா வரசரிருவருண்டு 1054
அதியூகமில்லா வமைச்சரிருவருண்டு
எதிரில்லாக்காலாள்க ளீரைந்தறுவருண்டு 1055
காலில்லாத்தேரிரண்டு கந்துகமோயீரிரண்டு
ஆலிமுகிலன்னகுழ லன்னமேயான்சொல்வதுகேள்
எதிரிலாவேந்தலுவ லில்லாதபோராடும்
சதிரங்கமென்றுமே சாற்றுவார்பெண்மயிலே 1057
விரிவாய்க்கதையை விளம்பினார்நக்கீரர்
அரிவைதெரிந்தங் கறைவாள்பின்னோர்கதையை 1058
அக்கரமுமூன்றுடையா ராவின்பின்னேதிரிவார்
சக்கரமுஞ்சூழத் தானேவலம்வருவார் 1059
உற்றவடந்தான்பூண் டிரலிற்கட்டுண்டிருப்பார்
வெற்பெடுத்துநெய்யாடி வேலைமிகவேசூழ்வர் 1060
இருமாநிலமதனி லெங்குமுளதுகண்டாய்
திருமாலுமல்லவிதைச் செப்புவீர்மன்னவரே 1061
அம்போருகக்கண் ணரிவையேதெள்ளமுதே
செம்பவளத்துண்டிதழாய்செக்கெனவேதானுரைத்தார்
பூமிமுழுதும் பொருந்தியேமன்றுள்ளாடிக்
காமியமில்லாருங் கண்டாவலுற்றிடவே 1062
பூவிலயனும் புகழுமிந்திரன்முதலாம்
தேவர்கள்போற்றுஞ் சிவனொனவெழுத்துச் 1063

சத்தமுண்டுமேனி தனிலேதழும்புமுண்டு
சுத்தனேகீரிதனைச் சொல்வீரெனவுரைத்தாள் 1064
வடிவுடையாருலக வாணிபரிடத்திருப்பார்
அடிபடுவார்மேனி யதனிற்றழும்புறுவார் 1065
முடியுடையார்குடிகள் முன்னேவலாயிருப்பார்
படிமுழுதுங்காக்கும் பணமென்றுரைத்திடலாம்
சங்கத்தலைவனங்கே சாற்றினதைத்தான்கேட்டு
மங்கைவேறோர்கதையை மன்னவனுக்கேயுரைப்பாள் 1067
கட்டியவன்கறையார் கால்பலவேயுடையார்
கொட்டியுநெய்தலுமே கூடமுளைத்திடுமே 1068
இட்டதமிழ்க்கரசே யேரியுமல்லவிது
இட்டமுடனே தெரியவேசொல்லுமென்று 1069
நங்கைக்கரசி நவின்றகதைகேட்டு
அங்குநக்கீர ரறைவாரதிவ்விவரம் 1070
கால்வழிநூலோட்டிக் கறையதற்குமேசேர்த்துப்
பால்போலுங்கஞ்சியிட்டுப் பட்டபுல்லாற்றடவி 1071
ஈரமுலர்த்தி யிழையைநன்றாய்த்திருத்தி
நேர்மையுடன்நெய்துதறி நீக்கியெடுத்திடுவார் 1072
பாகனையதேன்மொழிமின் பாவையேயேரியல்ல
மேகலைதானென்று விளம்பலாம்பெண்மயிலே 1073
கானத்திருந்துவந்து கைகளாற்குத்துமுண்டு
தானகத்திற்கூடந் தன்னிலேநீராடி 1074
மேனிவெண்மைகொண்டிழந்து வீதியிலேவருவார்
ஆனையுமல்ல அருள்வீர்கவிக்கரசே 1075
தான்கொண்டுவந்துடனே தைத்தகத்திலேபோட்டுத்
தேனுடன்பாலன்னந் தெவிட்டவமுதுசெய்து 1076

மான்கண்ணிகர்விழிசேர் மாதேபுவியதனில்
ஆனையுமல்ல வருங்கல்லேயென்றுரைத்தார் 1077
நீரிலுளமூன்று நெடுங்கானிலேமூன்று
ஊரிலுளமூன்று வெளிசேர்வனிதையொன்று 1078
கார்முகமுங்கல்விக் கடலாமுனிவனென்று
பாரிலிதையறிந்து பாவலரேசொல்லுமென்றாள் 1079
நீரில்மூன்றென்று நிகழ்த்தினதைத்தான்கேளு
காரிகையேமகரங் கற்கடகமும்மீனம் 1080
ஆசையுளபெண்ணே யடவியில்மூன்றுரைத்தாய்
மேஷரிஷபசிங்கம் மேல்லியேகாவுளது 1081
முன்னமேவூரதனில் மூன்றுண்டெனவுரைத்தாய்
அன்னமேசொல்வே னதற்கும்விவரமது 1082
துலாங்தேள்மிதுனமெனச் சொல்ராசிகள்மூன்றும்
புலம்புஞ்சிலம்படிசேர் பொற்றொடியேயூரில் 1083
கொட்டுவதுதேளாகுங் கூத்தாடுவதுதுலாப்
பட்டிடைப்பெண்மயிலே பாடுமிதுனமது 1084
பேதையாங்கன்னி பெரியதனுசாவதுவில்
தாதுறையுங்கூந்தலுள தையலேதெற்குமுனி 1085
கும்பமென்றுசொன்னவுடன் கோதைகதையுரைப்பாள்
வம்பமரும்மாலையணி மார்பனேயான்சொல்வதுகேள் 1086
வாருவார்கூடுபுகு வார்வாயுங்கூப்பிநிற்பார்
பாரெலாந்தானே பரிந்திருப்பாரேநீரில் 1087
சுழித்தேறுபாலித் துறைநாடாசொல்லுமென
எழுத்தாணியல்ல வியம்புவீரென்றுரைத்தாள் 1088
காரிகையாள்சொன்ன கதையைவெளியாகப்
பாரிலறியப் பகர்வார்நக்கீரருமே 1089

வாருவார்கூடுபுகு வார்வாயுமேகுவிந்து
பாரெலாந்தானே பரிந்துழல்வர்சீராகி 1090
கச்சிருக்குங்கொங்கைக் கனங்குழையீர் கார்வண்ணன்
மெச்சுகடலில் விளைந்தவுப்பென்றுரைத்தார் 1091
சங்கத்தலைவனது தாற்பரியந்தான்கேட்டு
மங்கைவேறோர்கதையை மன்னவனுக்கேயுரைத்தாள்
துய்யைந்துபாணந் தொடுத்தான்வேளிப்பொழுதே
மெய்யைந்துவிட்டாலும் வேண்டேன்யான்மெய்யாக
கையைந்துடையான் கதிர்முகத்திலொன்றுடையான்
மெய்யைந்துடையான் விளம்புமெனவுரைத்தாள்
நினைக்குமரவிந்தம் நீள்பசலைசூதமது
அனைத்துணர்வுமாற்று மசோகந்தனித்திருந்து 1095
முல்லைகிடைகாட்டும் முழுநீலந்தான்மானே
கொல்லுமதனம்பின் குணமெனவேதானுரைத்தார்
கையைந்துமெய்யைந்து கதிர்முகமொன்றென்றுரைத்
பையல்குல்மின்னே பகர்வேனதைக்கேளு [தாய்
தேரினவண்மையிறை யிம்மைதேய்வின்குறியும்
வாரணிமின்னே மதிநுண்மையைந்தறிவாய் 1098
மெய்யைந்தைக்கேளாய்நீ மேனிதனிலேசோம்பல்
நெய்சேர்குழலுடையாய் நெட்டையுடல்முறித்தல்
வெம்புங்கத்தாழையுடன் வீச்சம்நடையறிவாய்
அம்புநிகர்கண் ணரிவையேநீயுரைத்த 1100
செய்யுள்தனக்கருத்துஞ் செய்தேனிதுவரையிற்
றுய்யமதிவதனச் சுந்தரியான்சொல்கவிக்குப் 1101
பொருள்நீயுரைப்பாய் பொருந்தும்படியாக
மருவாசிக்குங்குழல்மின் மங்கையேயென்றுரைத்தார்

பஞ்சவர்கள்பேரும் பண்புமவர்குணமுந்
தஞ்சமுடனதனைச் சாற்றவேநெஞ்செதிரே 1103
இன்னவகையி னிடையேநல்வேந்தனையுஞ்
சொன்னார்புலவர் தொகுத்தெனவேயுரைத்தார் 1104
சாந்தமுளமாது தமிழறிவாளுரைப்பாள்
ஏந்தலேபூமிசல மெண்ணுவாயுவாகாயந் 1105
தேசிகமாருநல தேயுவோடைந்தாகும்
மாசிலாமன்னு வடிவமதையேகேளும் 1106
மெய்வாய்கண்மூக்கு விளங்குசெவியைந்தாகும்
துய்யகுணமென்றீர் சொல்வேன்பரிசரசம் 1107
ஆருமொலிரூபகந்த மாகுமோரைந்தாகச்
சேருமுணவதனைச் செப்புவேன்மன்னவனே 1108
உண்ணலுடுத்த லுயிர்த்தல்காண்டல்கேட்டல்
எண்ணிலைந்தாகு மிறையேயெனவுரைத்தாள் 1109
வாய்வளையைப்பற்றி மாநிலத்திலேயழுத்தித்
தாயநீராடியங்கு சூழவளைந்தமிழ்ந்திக் 1110
கொடிகள்பலசூழக் குழைவாய்வளைந்திருக்கும்
வடிவுளமாதே வளங்காயெனவுரைத்தார் 1111
சாற்றவ்வளைவாகுந் தாரணியின்மீதிலது
மாற்றலரைவெல்ல வகையுளதோசேற்றூடும் 1112
ஆற்றுமற்றுன்குறையு மம்மடுவிலேகவிழும்
ஊற்றுலுங்காணீ ருகந்தெனவேயுரைத்தாள் 1113
சத்வகுணத்தலைவன் றமிழறிவாட்கேயுரைப்பான்
உத்தமப்பெண்ணே யுரைப்பேனிதைக்கேளு 1114
மாநிலத்திலேயறியா மாநகரநாடுமில்லை
கானிலுறுங்காலுமுண்டு காசினியிலேநடவார் 1115

வாவில்லேதான்பெற்ற மைந்தர்தமையுஞ்சேரார்
சீலமுடன்குழுவாய்ச் சேரார்சினேகிதத்தால் 1116
ஆலநிகர்கண்ணு யறைவாயெனவுரைத்தார்
சீலமுளாள்பொருளைச் செப்புவாளம்மானை 1117
தேங்குபலாவிலுப்பை தேமாவாலத்திநவ்வற்
றூங்குவரிக்கோபுரங்கள் சாலேசோலேயரங்கிற் 1118
றாங்குமணியாய்த் தொகுப்பாயினங்களொடு
வாங்காமலேயிருக்கும் வெளவாலென்றேயுரைத்து
நல்லதமிழ்க்குரிய நற்கீரனைப்பார்த்து
வல்லேநிகர்தனத்து மங்கையுமப்போதுரைப்பாள்
மன்னுகலேக்குரிய வல்லீரோயாமாகிற்
பன்னுவிறகுதலேப் பாவலரேயின்னமுநீர் 1121
சொல்வீரோவென்றுரைப்பச் சொல்லுவேன்சொல்லுமென்று
வல்லமைசேர்செந்தமிழின்மானேயெனமொழிந்தார்[ல்
கள்ளவிழுங்கூந்தற் காரிகையாளப்போது
வள்ளலேநீரும் வழுத்துங்கதையையென்றாள் 1123
படைதனிற்சென்று பலவழிவாயறுத்துக்
குடமுடையநல்ல குதிரையெனமேலேறி 1124
கோட்டைதனேயிடித்துக் கொல்லேதனிலாடி
காட்டைப்புரக்கும் ராசர்பகைதானுமல்ல 1125
விடையேறுமீசரிட மிக்ககிருபையினல்
அடைவாயிதனே யருள்வாய்நீபெண்மயிலே 1126
கங்கைதனேசூடிக் கையிலேமானேந்திப்
பொங்கரவம்பூண்டு புலித்தோல்தனேத்தரித்த 1127
சங்கரன்றன்மைந்தன் தந்திமுகவனெனும்
ஐங்கரனுரேறு மாகுவெனவேயுரைத்தாள் 1128

திடமாமூலகமதில் தீரந்தனில்மிகுந்த
விடையேறுமந்தமுள வெள்ளிமலையானுமல்ல 1129
அலைசூழ்புவியி லதிவீரந்தானுளதாய்த்
தலையிற்பூச்சூடுந்தையலர்கடானுமல்ல 1130
போரிலெங்கெங்கும் பொருந்துமிதனைநன்றாய்
ஆராய்ந்துரையு மரிவையேயென்றுரைத்தார் 1131
காவிற்குறமானை கண்டுமெய்க்கமுற்று
மாவுடன்றேனும் வழங்கவமுதுசெய்து 1132
தேவர்தமக்கந்நாள் சேனுபதியாகி
மூவரும்வெல்ல முடியாவசுரர்தம்மை 1133
வெட்டியழித்தவடி வேலனிடதேரிற்
கட்டுங்கொடியாய்க் காணுதுகாண்மன்னவனே 1134
வண்டுணுப்பூவுண்டு வயிறுண்டுகாயுமுண்டு
செண்டுநிகர்முலையாய்த் தின்னுப்பழமுமுண்டு 1135
வீடுண்டுவாசல்விட்டு மேலேறித்தான்வருவார்
ஆடலுண்டங்கே யனேகர்புடைசூழ்வர் 1136
பலவிதவண்ணம் பழுப்பதொருகாய்தான்
மலையாதிதனை வழுத்துவாய்மாதரசே 1137
சந்தனுராசாவின் தன்னுடையபேரர்
குந்திகாந்தாரி குமாரர்சபையதனிற்
றக்கசுயோதனன் றருமனுடனுடுஞ்
சொக்கட்டானென்றவருஞ் சொல்வார்தமிழ்ப்புலவோய் 1139
சிற்றுடைகட்டுஞ் சிறுமியல்லமாதரசே
வெற்றிப்பூணூலணியும் வேதியர்கடானுமல்ல 1140
உடற்கெண்ணெய்தேய்ப்பா ரொளிசேர்வணிகரல்ல
படர்ந்தகழுத்திற் பருத்தமணியணிவார் 1141

நேரிழைநீகேளாய் ரிஷபமுமல்லவது
ஏரார்புரத்தைய் யெரித்தோனிடத்திருக்கும் 1142
சிறந்தபணிவிடைக்குத் தீயருந்தானல்லவவர்
அறந்திகழ்பெண்ணே யருள்வாயெனவுரைத்தார் 1143
கங்கையமுகு கதிர்மாசுணமணிந்து
மங்கையிடப்பாகம் வைத்தோன்றலைத்திருக்கும் 1144
ஆடைமலர்பூண்டங் கணிதேர்விழாப்பொருந்தும்
தேடுகொடிக்கம்பமெனச் செப்பலாம்மன்னவனே
வென்றியுளபெண் விடுவித்தாளக்கதையை
நன்றெனவேமகிழ்ந்து நக்கீரர்தானுரைப்பார் 1146
ஆய்ந்தசயனத்தி லாயிழையையன்றியான்
போந்திங்கேதானிருக்கப்போகுமோவாய்ந்திடுசீர் 1147
முன்னுண்முலையு முழுமதியுமன்றியிங்கு
என்னுகுமென்செய்வ தெனவேயிவருரைக்க
மங்கைதனக்கப்போ மன்மதவிகாரமது
பொங்கத்திரைநீக்கிப் பூமான்றனைப்பார்த்தாள் 1149
கன்னிகையார்நோக்கைக் கண்டுநக்கீரருமே
அன்னமெனும்நடையா ளாயிழையைத்தான்கேட்பார்
என்னைவிறகுத்தலைய னென்றேயிகழ்ந்தாய்நீ
மின்னிடையும்பெற்ற மெல்லியேமன்னவர்தம் 1151
தோமுவழகுடையார் தோளின்மேலேயணைந்து
தேருதவாரதனைச் செப்பாயெனமொழிந்தார் 1152
புலவனுரைத்தமொழி பொற்றொடியாடான்கேட்டுத்
தலைமயக்குற்றுத் தலைவிமோகத்தாழ்ந்து 1153
மட்டவிழுங்கூந்தல் மங்கையெழுந்தேயவரைக்
கட்டிப்பிடித்தினியகாரிகையாள்தானுரைப்பாள் 1154

கையிருக்கக்காமன் நெறியிருக்கக்காதலுடன்
மெய்யுருகக்கண்ட விழிபருகவேயெனது 1155
பாகினிதைப் பசுந்தேறல்முப்பழம்போல்
ஆவலுடனேயருந்தி யன்பாயணையுமென்றாள் 1156
வாரிட்டகொங்கைவிம்மி மாதுமயிற்கூச்சலிட்டுத்
தாரிற்றனல்தாக்கிச் சாய்பலாய்ப்பூவில்விழக் 1157
காமனும்நாலுகணை கன்னியின்மேலேதொடுத்தான்
பூமன்னுமாது பொருந்தும்மயக்கமதைக் 1158
கண்டுநற்கீரிந்தக் கன்னியுடனேசேர்ந்தால்
தண்டமிழ்ச்சங்கப்பலகை தானும்பொருதுநம்மை
நான்குயுகமாயிருந்த நன்மையெலாந்தானழியும்
தீங்காமவகீர்த்தி சேரும்நமையுலகில் 1160
மெல்லிநல்லாளை விறகுதலையனுக்குப்
பல்லோரறியமணம் பாரில்முடிப்பனென்று 1161
சங்கத்தார்முன்னே சபதமுரைத்துவந்து
கொங்கைமின்னாளையுமே கூடினாற்குற்றமன்றோ 1162
எனவேபலவாறு யெண்ணுமனதைத்திருப்பிச்
சினமிலாமன்னனைப்போ செப்பினானோர்கவியை 1163
ஒருவனொருத்தியா யூரல்லாவூர்புகுந்து
இருவர்க்கிருமதலை பெற்றானிருவரிலே 1164
மூத்தானைக்கொன்றான் முகுந்தன்றனதடிமை
தாதைவருமளவும் தையலரேநீசகிப்பாய் 1165
கட்டினகையைவிட்டுக் கட்டிலைவிட்டிறங்கித்
தட்டிலாக்கல்வித் தலைவியும்பன்னீரிறைத்து 1166
மயில்விசிறிதானெடுத்து மன்னனெதிரில்நின்று
அயில்விழியாள்வீசி யறைவாளதன்பொருளை 1167

ஒருவனொருத்தியென வோதினீர்பாவலரே
அருணனொருநாளி லாதித்தனைப்பார்த்துத் 1168
தேவலருலகமது சென்றுவருவனென
ஆவலுடன்கேட்க வனுப்பினனாதவனும் 1169
நாகருலகம் நரர்பூமிதேவுலகம்
மூவுலகத்திலுள மொய்குழலார்தமக்குள் 1170
மேலாமழகுடைய மெல்லிநல்லாளாகி
மாலாகுமிந்திரன்முன் வந்தான்சபையதனிற் 1171
மோகங்கொண்டிந்திரனும் மொய்குழலாளைப்பார்த்துச்
சாகசமாயவனுந் தான்கூடவேநினைந்து 1172
பெண்ணேபெண்ணாயகமே பேருலகிற்கிட்டாத
கண்ணேயென்னாருயிரைக் காக்குங்குயிற்பேடே 1173
மாரனெனும்பாவி வருத்தாமலேயெனையுஞ்
சேருமெனவேயவளைச் சேர்ந்தானங்கேஜனித்த 1174
பிள்ளைதனைக்கூட்டிப் பெண்ணுருவந்தான்மாறி
வள்ளலருணனுந்தான் வந்தான்கதிரவன்முன் 1175
ஆதித்தனந்த வருணன்றனைப்பார்த்து
ஏதிந்தப்பிள்ளை யெனவேயவன்கேட்கச் 1176
சொல்வானருணன் சுவர்க்கலோகந்தனக்குச்
செல்லும்பொழுதினில்யான் சிற்றிடைப்பெண்ணுருவாய்ச்
சென்றேன்மனமகிழ்வாய்த் தேவேந்திரனிடத்து
நின்றேனெனைக்கண்டு நீதியுளான்றான்மயங்கிக் 1178
கூடுவாயுந்தனுக்குக் கோடிநமஸ்காரமென்று
வாடுமிடையாய்நீ வாருமெனவேகரத்தைப் 1179
பற்றினான்யானும் பயந்தவனையேகூடிப்
பெற்றேனிப்பிள்ளை பெருமானேயென்றுரைத்தான்

ஆதித்தன்கேட்டங் கதிகமகிழ்வாகிப்
பேதித்துலகைமயக்கும்பெண்ணுருவங்கொள்ளுமெனச்
சொன்னானிரவி சொரூபமதுதான்மாறி
மின்னாளெனவே விளங்கினனேயருணன் 1182
பார்த்துமயங்கியுடன் பைங்கிளியாடனையுஞ்
சேர்த்துப்பிடித்தவனுஞ் செவ்வாயிதழருந்திக் 1183
கொக்கோகத்தின்படியே கூடினன்சூரியனும்
தக்கதோர்பிள்ளை தரித்துவெளியில்வந்தான் 1184
வாலிசுக்ரீபனென வைத்தார்திருநாமம்
ஆலிமுகிலன்ன வருள்சேர்கவிவலரே 1185
மூத்தானைக்கொன்ற முகில்வண்ணன்றன்பகைவன்
பார்த்திபனிலங்கைப் பதிவாழிராவணன்றன் 1186
ஏதுவளநகர்தீ யிட்டவனுமனவன்
முதைவாயுவென்று தமிழறிவாடானுரைத்துக் 1187
காற்றிலாதாலே கனலாயிருக்குதென்று
சாற்றிநீரும்மைத் தழுவுங்கைவிட்டுவெப்பை 1188
மாற்றநினைந்து மயில்விசிறியாற்கனலை
ஆற்றினேனென்றங் கறிவிக்கும்போதிலொரு 1189
பல்லிநிமித்தம் பகரவதுகேட்டுச்
செல்வனமக்குச் செயமாகுமென்றுணர்ந்தான் 1190
தந்திடையாள்கெவுளி தான்சொன்னதைக்கேட்டு
நந்தாவழகுடையாள் நாமமரணமேயடையச் 1191
சொல்லுவதென்று சுருதியுணர்வாளறிந்து
நல்லநிலைமையுள நக்கீரரைப்பார்த்துத் 1192
தேனுறைதாராய்கெவுளி செப்பினதுமென்னவென
மானேமரணம் வழுத்துதெனவுரைத்தார் 1193

வேதன்விதியை விலக்கவெவராலாகுஞ்
சூதொன்றில்லாமலிங்கு சொல்லுங்கவியையென்றாள்
தொடிசேர்கரத்தாய்யான் சொல்லுங்கவிக்கருத்தம்
முடிவாயுரைக்க முடியுமோசொல்லுமென்றார் 1195
அத்தனைவல்லவரோ வாறாலும்நீர்தோற்றால்
சித்தனேயும்மையென்ன செய்வதெனக்கேட்டாள்
பூணூல்சிகையறுத்துப் போட்டுனதுவீட்டிற்
றேனேயடிமையும்யான் செய்வேன்நீதோற்றாலென்
செய்வதெனக்கேட்ட சீமான்றனைப்பார்த்துத்
துய்யமதிவதனத் தோகையுரைத்திடுவாள் 1198
யான்வாழ்மனையை யடியோடுதோணிடித்துக்
கானூர்குழல்சிரைத்துக் கர்த்தபத்தின்மேலேற்றி 1199
ஊர்வலஞ்செய்தெனையு மோட்டிவிடுவதென்றாள்
சீர்த்தியுள்மாது செப்புமொழிகேட்டுத் 1200
தென்னன்மகிழ்கின்ற சீமானுரைத்திடுவார்
கன்னிநீதோற்றாற் கடையனொருவனைச் 1201
சேர்த்தவனுக்குத் திருமங்கலம்பூட்டிப்
பார்ப்பேனிதற்கென் பகர்வாயெனக்கேட்டார் 1202
நினைத்தபடிநீர் நிறைவேற்றிக்கொள்ளுமெனக்
கனத்ததனத்தாள் கழறினளம்மானை 1203
நன்னூலிலக்கணத்தில் நல்லவிலக்கியத்திற்
மின்னனையிடையாளை வெல்லமுடியாது 1204
மதுரையைவிட்டு வரும்போதிடைவழியிற்
கதிரைமறைக்கின்ற கானகத்தினடுவிற் 1205
கண்டவதிசயத்தைக் காவியமாய்த்தானமைத்துக்
கொண்டுகோதையிடத்திற் கூறுவாரம்மானை 1206

பச்சுத்தேரேறி நடுக்காட்டில்வேடுவச்சி
பச்சைக்கொடியாடப் பார்த்தவளையிச்சைகொண்டு
மேலவனங்கவர்ந்து மின்கொண்டுபோகின்ற
மூலபலம்நீமொழிவா யெனவுரைத்தார் 1208
உரைத்தகவியைக்கேட் டுள்ளபொருளாராய்ந்து
வரைத்தனக்கன்னி மதிக்கொன்றுந்தோற்றுமற் 1209
றலையைக்கவிழ்ந்து தனதடியைத்தான்பார்த்து
நிலைமைதவிர்ந்து நெடுமூச்சுடன்வியர்த்து 1210
இத்தனைகால மிருந்தேன்புவியதனிற்
சித்தந்திகைத்திடவே செய்தவர்களில்லையெனை 1211
கல்விக்கொடியதனைக் கட்டியுறையூரிற்
செல்வியெனவேதான் திக்கெட்டும்பேரோங்க 1212
ஈராறுசகஸ்திரவ ரெல்லாம்பணிகேட்கப்
பாரினிற்கல்வி படித்தோரெனைவணங்க 1213
இருந்தேன்கியாதியுட னிப்போதொருவனிடம்
திருந்தும்பொருள்கவிக்குச் செப்பாதேயாமிருந்து
வருந்துமுயிரையினி வைத்தேயுலகமதில்
இருப்பதிலுமிங் கிறப்பதழகெனவே 1215
அற்பூறுங்கன்னி யகத்திலுறுதிசெய்து
நற்கீரர்முன்னே நவின்றளொருகவியை 1216
உண்டிகொடுத்தார்க் குயிர்கொடுக்கவெண்ணுது
வண்டார்குழலாள் மகிழ்வின்றியுண்டிதனை 1217
உண்டாருஞ் செத்தாருமுண்டிருந்தார்களுண்டோ
உண்டாநரகமதி லுட்புகாரென்றுரைத்து 1218
நிலைக்கண்ணுடியையந்த நேரிழையாடானுடைத்துக்
கொலைக்கஞ்சாமற்றன் குடல்சரியவேகிழித்து 1219

சிவனைவிட்டாளே செந்தமிழின்பூமாது
தீவினையாளிவளுஞ் செத்தாளெனக்கிரர் 1220
பழுதிலாமங்கைதனைப் பட்டாடையால்மூடிப்
பொழுதுநன்றாய்விடிந்து போனவுடன்றானெழுந்து
காரிகையாள்செல்லுங் கள்ளவழியாகப்
பாரிற்புகழ்படைத்த பைந்தமிழோனடந்து 1222
வெளியேறியேவிறகு விற்பவனைத்தான்பார்த்து
அளிசேருந்தாரா னவளிடத்திலேயிருந்த 1223
பச்சைவடம்பிரம்பு பாகைகடுக்கன்வாங்கி
இச்சையிலான்றானு மின்பமுடனேதரித்துப் 1224
பாதுகையைமாட்டிப் பாரின்மேலேநடந்து
நீதமுளானை நிருபன்சபைக்குவந்து 1225
மங்களாநீபவந்து மன்னுவெனவேதன்
செங்கையாலாசீர்வாதஞ்செய்தாசனத்திருந்தார் 1226
மாதுமரகத வல்லிதுயில்நீங்கித்
தாதுறையுங்கூந்தற் றமிழறிவாளிரவு 1227
இந்தனத்தானை யெதிர்வாதத்தாற்செயித்துச்
சுந்தரனைமாது துரத்தியிருப்பளென்று 1228
பாங்கியரோடுவந்து பார்த்தாளரண்மனையில்
மாங்கிஷம்பீறி வயிற்றின்குடல்சரிந்து 1229
உதிரம்பெருகி வுடைமுழுவதும்நனைந்து
மதுரமொழியாள்மா மயிலெனவேசாய்ந்த 1230
மாதைமரகத வல்லிகண்ணுற்பார்த்தாள்
வாதாடவந்த மகளேயெனவடித்து 1231
விழுந்தாளுயிர்ப்படங்கி மெய்வாய்கண்சோர்வடையச்
செழுந்தேனேயென்றங்கு சேடியரெலாம்புலம்ப

மயக்கந்தெளிந்து மரகதவல்லிபின்னும்
வயிற்றிலறைந்து மகளைநன்றாய்ப்பார்த்து 1233
கல்விக்களஞ்சியமே சற்றோர்க்குச்சிம்மேறே
செல்வமேயானீன்ற தேனேமரகதமே 1234
எத்தனைசென்மமெடுத்தாலுமிப்புவியிற்
பத்தினியேயுனைப்போற் பார்ப்பேனோயான்பாவி
பாலுண்ணுங்கன்றிழந்த பாற்பசுப்போலானேனே
கோலிழந்தகண்ணிலாக் கொடும்பாவியானேனே
என்றுபுலம்பி யிருகண்ணில்நீர்சொரிய
மன்றலமர்கூந்தல் வல்லியுந்தோழியரும் 1237
காவலனை கரிகாலசோழனிடம்
ஆவலாய்வந்தங் கடித்துவிழுந்தழுதாள் 1238
கன்னியேநீகதறுங் காரணந்தைச்சொல்லுமென
மன்னனிடந்தில் மரகதவல்லிசொல்வாள் 1239
தாரோங்குந்தின்புயந்தாய் சாயங்காலந்தனிலே
ஆரோவொருவன்வெட்டியான்போலவேவாளைப்
பாடைதனைக்கட்டிப் பாங்காய்தலையில்வைத்துத்
துட்டன்விறகெனவே சொல்லிவிலைகூறி 1241
வந்தங்கரண்மனைக்குள் மாதுநல்லாளுடனே
சந்தாருமார்பனுமே தங்கித்திரவதனில் 1242
இருந்தான்விழித்திருக்க வெங்களாலாகாமற்
றிருந்தலர்சிம்மேறே சேடியரும்யானும் 1243
படுத்தோமுறங்கிவிட்டோம் பாவிகபடமதாய்க்
கெடுத்தென்மகள்வயிற்றைக் கீறிவுயிரழித்து 1244
எங்குசென்றானோ யிறையேயெனவழுதாள்
துங்கநற்சோழன் சொல்வான்வருத்தமுற்று 1245

இருமாநிலத்தி லெனதுமரபில்முன்னம்
ஒருபுருவுக்கா யுடலைக்கொடுத்திருக்க 1246
இந்தப்பழிக்கியா னென்செய்வதென்றரசன்
சந்தேகமாகிச் சபையோர்களைப்பார்த்தான் 1247
நல்லாசனத்திருக்கும் நக்கீரனைநோக்கி
வல்லார்தனத்தியிடம் வாதித்தவனிவனாய் 1248
இருக்கலாமென்றிறையு மெண்ணினனப்போது
மருக்கமழுங்கூந்தல் மரகதவல்லிசொல்வாள் 1249
கையார்குடையான் கதலிவிறகுவிற்பான்
பொய்யாதநன்னூற் பொருள்காண்பான்மெய்யாக
மையாரும்வேற்கண் மடமானைமன்னவனே
ஐயோகோகொன்றா னவமேகெடாயென்றுரைத்தான்
மாதுநல்லாள்சொன்ன வசனந்தனைக்கேட்டு
ஏதுவுடன்கீர ரெடுத்துரைப்பாரதற்கு 1252
பொய்யாதமுத்தமிழின்பொற்கொடிக்குச்சூழ்ந்தகொ
கொய்யாமதுமாலைக் கொற்றவனேமெய்யாக [லை
மையாருங்கூந்தலுள மங்கைதனைமன்னவனே
கையாரக்கொன்றதிலை காணுமெனவுரைத்தார் 1254
பழிக்கஞ்சாநீரார் பகர்வீரெனக்கேட்டான்
செழித்தபுனல்நாட்டுத் தேர்வேந்தனேமதுரை 1255
நாலாயிரத்தைஞ்ஞூற்று நானூறுஞ்சங்கமதில்
மேலானநக்கீரன் வேந்தனேயென்பெயர்தான் 1256
உழைத்தபுருவுக்கா யூன்சதையைநேராக
அழைத்தேயரிந்தவனே யாகுமெனவேயுரைத்தார்
உறவற்றார்போல வுறையூர்க்குள்ளேபுகுந்து
பொறையுறைகாணுமிந்தப் பூதலத்திலேயறையும்

நறைகமழுந்தாருடைய ரானுக்காமிவ்வூரில்
விறகுவிற்பதேனோ விளம்புமெனக்கேட்டான் 1259
நாட்டரசன்கேட்க நவில்வார்நற்கீரருமே
வாட்டமிலாமாலையணி மன்னவனேநீர்கேளும் 1260
கூறுவார்கூறும் பரிசேகுறைவறியா
வீறுமேநின்று விடவறியான்மாதுடனே 1261
ஏசுவாரேச்சு மெளிதாகுமன்றியிலென்
காசுதனைவாங்காத காரணமேதென்றுரைத்தார் 1262
என்றுநற்கீரரியம்புவதைத்தான்கேட்டு
மன்றலமர்தாரான் மந்திரியுந்தானுரைப்பான் 1263
பூவேசிலபறிப்பார் பூணேசிலர்விடுவார்
பாவேபடிதலையின் பண்பாகுமேசால 1264
மதுரங்கள்வண்டுண்ணும் மாவேவடுவாகும்
இதுதவிரவுண்டோ வியம்புமெனவேகேட்டான்
புவனமதிற்கீர்த்தி பொருந்துநற்கீரருமே
இவனேநமைப்பார்த் தியம்புவதென்றேநினைந்து
மகராசனுக்கிருக்கும் வாயுவைமந்திரத்தாற்
றகைமையுளான்மந்திரிக்குச் சாரும்படியாய்ச்செபித்தான்
தலையிரங்கியேயமைச்சன் றானேவருத்தமுற்றான்
கலையிலுயர்சோழனைக் கண்டுடனேதான்பயந்து
எழுந்துநற்கீ ரிணையடியிலேதாழ்ந்து
தொழுதுமதிமயங்கிச் சொல்வானவரிடத்தில் 1269
பாவலர்சிம்மேறே பரமன்றனக்குரிய
தேவரீரொந்தனது செந்தமிழ்தேர்மாதினையும் 1270
மன்னுயிரைத்து வரும்படிநீர்செய்யுமென்று
சொன்னமுடிவேந்தன் றொழுதான்மறுபடியும் 1271

நாவலவனை யொரு நற்கீரர்தான்மகிழ்ந்து
பூவலனேயுனது பொற்கொடியையிங்கெடுத்து 1272
வாருமெனக்கீரர்சொல மன்னவன்றனுத்திரவால்
நாரியர்கள்தாமோடி நாயகியாள்தானிருந்த
கன்னிகாமாடமதிற் கட்டிலின்மேற்றான்கிடந்த
பின்னமிலாக்கல்விப் பெருமாள்தனையெடுத்து 1274
கோவேந்தன்முன்னிலையிற்கொண்டுவந்துவைத்தார்கள்
பாவேந்தனப்பிணத்தைப் பார்த்துவிசனமுற்றான்
பட்டணத்திலுள்ள பரிசனங்களெல்லோரும்
இட்டமுடனேசேர்ந்து செப்புவாரம்மானை 1276
கலைமகட்குமேலான கல்விதனிலேசிறந்த
தலைவிதனக்கிவ்விதியுந் தான்வருமோவென்பாரும்
காவலவனை கரிகாலசோழனுந்தான்
பூவைதனைப்பார்த்துமுயிர் போகாதிருந்ததென்னே
சேடனுமேபாவிற் செயிக்கமுடியாத
சேடிதனைப்பூவிற் செயித்தவனுரென்பாரும் 1279
பாகின்மொழியாள் பருவமதையேயறிந்து
வாகுளமன்னன் மணஞ்செய்தானில்லையென்றும் 1280
பெண்ணுக்கிசைந்ததொரு பிள்ளையில்லாததினல்
அண்ணலுமேகல்யாண மன்புடன்செய்யாதிருந்தான்
கல்விதனிற்செயித்த காவலருக்கெத்தனையுஞ்
செல்விவிவாகமது செய்யுமெனவேயுரைத்தாள் 1282
ஆனதினலிந்த வரசன்கொடாதிருந்தான்
மானுருயிரை மடித்தாள்காணென்பாரும் 1283
ஐயோயிவளு மவமிருத்துவாய்மடிய
வையத்தரசனுயிர் வைத்திருக்கானென்பாரும் 1284

ஏயுங்கவியு மிவட்குப்படைத்தவன்றன்
ஆயிழையேன்குறைத்தா னதியயனென்பாரும் 1285
உலகவழக்கமதை யொன்றுமறியாமற்
றலைவியிறக்கத் தகுமோகாணென்பாரும் 1286
மண்ணாளும்வேந்தன் மணமாலையைச்சூட்டிக்
கண்ணிறைப்பாராத காரணமேதென்பாரும் 1287
கடல்சூழ்புவியதனிற் கற்புநிலைமையுள
அடல்வேல்விழியாட் கருந்ததியுந்தானிகரோ 1288
என்றுநகரோர்க ளெல்லாம்புலம்பிநிற்கக்
குன்றன்னதோளணிந்த கோமானற்கீரருமே 1289
கன்னிதன்மேலே கமண்டலத்தின்சலத்தைத்
தென்னன்மகிழ்வோன் றெளித்தங்குரைத்திடுவான்
வீறுமிவளுக்கும் மிக்கோரும்வேந்தனுக்கும்
மாறுகயாம்வந்த வாறறியக்கூறுகி 1291
விழுந்தநிணமடக்கி வெள்ளெலும்புபெண்ணாக
எழுந்திருக்கவேண்டு மினியெனவேயிவருரைத்தார்
சரிந்தகுடலுட்போய்த் தமிழறியும்பெருமாள்
எரிந்தமதனனெழுந்தாற்போலேபாரை 1293
பாரையெனவேதான் பைந்தமிழாளும்மெழுந்தாள்
பூரையெனவே புகன்றார்நற்கீரருமே 1294
தலையைக்கவிழ்ந்து தமிழறிவாள்தானும்
நிலைமையிலாமலங்கு நின்றவளைத்தான்பார்த்து 1295
சிறந்ததமிழின் றிறமறியமாட்டாமல்
இறந்தனையோகொன்றதுனை யாமோமிகவறிந்து 1296
செந்தமிழின்சோழனிடஞ் சேரவந்துநின்றுதொழுஞ்
சொந்தவுன்னச்சியுடன் சொல்வாயெனமொழிந்தார்

மங்கையறிந்து வழுத்துவாள்கீரருக்கு
நங்கைதரித்த கடவுளருள்பெற்றுவந்தோய் 1298
நானேபழிபடைத்தே னடாதென்றவ்வையார்
தேனார்கமலத் திசைமுகனார்தன்னெழுத்துத் 1299
தலையோட்டிலுள்ளபடி தப்புமோயாவருக்குங்
கலைக்கோட்டுமாமுனியே காணுமெனவுரைத்தாள்
சங்கத்தலைவனிடந் தையலாள்தானுரைக்கப்
பொங்குகடல்சூழ்ந்தபுவியாள்வோன்றான்மகிழ்ந்தான்
செய்பகலைக்குரியாள் செப்புவாளோர்வசனந்
துய்யதமிழ்க்குயர்வாய்ச் சொல்வாரகஸ்தியனைப்
பொருந்தும்வடமொழிக்குப் பொன்னனைமேலென் றுரைப்பார்
இருவருக்கும்மேலென் றிருந்தேனுலகமதில் 1303
ஆராயும்போதி லவர்கள்திறமையெல்லாந்
ஏராருஞ்சங்கமதற் கில்லையிணையாக 1304
என்றுதமிழ்மா தியம்புமொழிகேட்டு
அன்றந்தச்சோழ னதிகசந்தோடமதாய்க் 1305
காரிகையாள்கையைக் காவலன்றான்பிடித்துச்
சீராரும்நக்கீர தேவரிடமேகொடுத்து 1306
பெற்றபெண்ணைப்போலப் பிரியமுடனேவளர்த்தேன்
கற்றவரேநீரும் கலியாணஞ்செய்துகொள்ளும் 1307
நாடுநகர்கனகம் நல்லபரிதேர்யானை
தேடும்புதல்விக்கே சீதனமாகத்தருவேன் 1308
என்றரசன்கூற வியம்புவார்நக்கீரர்
நன்றுகாண்வேந்தே நமக்குமகளெனவே 1309
தேன்சிந்துதாரானுஞ் செப்பினதைத்தான்கேட்டு
ஏனிந்தப்பெண்ணை மகளென்றீர்கவிக்கரசே 1310

கல்வியில்மேன்மையுளாள் கற்பிலருந்ததியாள்
செல்வத்திலிந்திரையாள் தேசில்ரதிநிகராள் 1311
கொஞ்சும்வயது குழந்தைப்பருவமிந்த
வஞ்சியிடையாள் மணஞ்செய்துகொள்ளுமென்றான்
பூவாழுமன்னவன் புகன்றமொழியைக்கேட்டுத்
தேவாரும்நக்கீரர் செப்புவார்மன்னனுக்குச் 1313
செத்தவளைப்பிழைக்கச் செய்தோமதனாலே
பெற்றபிள்ளையாமென் பிரியமுளமருகன் 1314
றனக்குவிவாகமது தாஞ்செய்வோமென்றுரைத்தார்
மனதுகனிந்து மகராசன்றானுரைப்பான் 1315
தேவர்மருகனுக்குச் செல்விதனைக்கொடுக்க
யாவர்செய்புண்ணியமோ யான்செய்தவப்பேறு
றுடங்கிடையாள்நோற்ற நோன்பின்பலனிதுவோ
மடங்கலனையானை வரவழையுமென்றுரைத்தான் 1317
அரசன்சபையைவிட்டே யப்பாலிருந்தவனைப்
புரிசையுயர்மதுரைப் பூமன்னன்றான்மகிழ்வோன்
அவனைமதியா தருலகில்வரத்தானழைத்தார்
இவனொன்னவிரும்பி யெல்லோர்களும்பார்க்கப் 1319
பாசிபடர்ந்திருண்ட பல்லும்பனங்காய்போற்
றேசிலாவின்முகமுஞ் செக்கினுலக்கையைப்போற்
காலுங்கருவுதடுங் கையதனிலேதடியுஞ்
சீலமிலானிடையிற் சேர்த்தவரிவாளும் 1321
கந்தத்துணிதலையிற் கட்கத்திலேமயிரும்
இந்தவிதமா யிறைவன்சபைக்குவந்தான் 1322
அன்னமெனுநடையா ளப்போதவனைப்பார்த்து
முன்னங்கடையில் முனிந்திவனைக்கேவலமாய்க் 1323

காரியுமிழ்ந்தேன் கடையனிவனெனவே
வாரிவளைபூவில் மாப்பிள்ளைதானில்லாமல் 1324
வந்தானமக்கு மணவாளனாகவேதான்
இந்தவிதிமுன் னெழுதினளோவெனக்கு 1325
உள்ளியதெள்ளிய ராகினும்பூழ்வினைதான்
மெள்ளவந்துள்ளில் புகுமெனவள்ளுவனார் 1326
என்றுமுன்சொன்ன தெனக்கேசரியாச்சு
கன்றும்கனியெறிந்த கண்ணன்திருவையிதோ 1327
கைநிறைந்தபொன்னுக்குக் கண்ணிறைந்தநற்கணவன்
வையலர்மேலென்று தரணிதனிலேயுரைப்பார் 1328
எனக்கவ்விதிவசந்தா னில்லாததனாலே
வனக்குறவன்போலவிங்கு வந்தானெனதிஷ்டம்
எனவேவருந்தி யிருந்தாள்தமிழ்மாது
புனனுடன்கண்டுமனம் புண்ணாயங்கேதுணைப்பாள்
மீனவன்கொண்டாடும் மிக்கதமிழ்க்கரசே
நானிவளையேவளர்த்த நம்மையறியீரோ 1331
கடல்சூழ்புவிதனிற் கல்விதனிலேசிறந்த
திடமானகீர்த்திபெற்ற செல்விதனையுமிந்த 1332
மூடனுக்குமாலை முடிக்கநினைந்ததென்ன
தேடுதமிழ்க்குரிய சீமானேயென்றுரைத்தான் 1333
சாதுரியமுள்ள தமிழறியும்பெருமாள்
நீதமுடனேகவிழ்ந்து நேரிழையாளும்முரைப்பாள்
பாதம்பணிந்தேன் பழையதமிழ்முனியே
ஏதுமறியே னினியுரையேன்பேதை 1335
செய்தபிழைபோக்கித் திருவுளத்துக்கேற்றபடி
எய்துவித்துக்கொள்ளு மினியுன்மனம்போல 1336

என்றுசொல்லிக்கன்னி யிருகண்ணிலும்வடிய
நின்றாளம்மாது நெடுமூச்சுடன்வேர்க்க 1337
சுந்தரஞ்சேர்சோழனையுந் தோகைதனையும்பார்த்துத்
தந்திடையாள்முற்பிறப்பைத் தானுரைப்பாரம்மானை
மன்னவனே கேளும் மங்கைவரலாறதனை
அன்னநடையா ளழகாபுரியாளுங் 1339
காவலவனுக்குமிவள் கன்னிகையாகப்பிறந்தாள்
பாவலர்கள்கொண்டாடும் பாடலிபுரத்தரசன் 1340
தனக்குமகனாகத் தான்பிறந்தானேயிவனும்
மனக்கவலைதானடைந்து வந்தானகரைவிட்டு 1341
மாதுநல்லாளை மணிமாடமதிலேபார்த்துக்
காதலுடனங்குநிற்கக் கண்டாளிப்பெண்ணரசும்
தானுமிசைகொண்டிவனைச் சாவடியிலேயிருக்க
மானுமோரோலை வரைந்தாளதையெடுத்து 1343
முடிவேந்தன் சென்றான் முடவனங்கேயிருந்தான்
துடியிடையாள்தந்த சுருளையவனிடத்தில் 1344
வாசித்துச்சொல்லென்று மன்னன்மகன்கேட்க
ஈசத்திரக்கமில்லா னேந்தல்தனைப்பார்த்து 1345
இப்பவேயிந்நகர்விட் டேகுமினியிருந்தால்
தப்பாதுனதுயிரைத் தான்வாங்கவேயரசன் 1346
உரைத்தானும்மங்கை யுண்மைதனையறிந்து
வரைத்தடங்கொங்கை வரைந்தாளெனவுரைத்தான்
முடவனுரைத்த மொழியதனைத்தான்கேட்டுத்
திடமானமன்னவனுஞ் சென்றான்வடதிசையில் 1348
கன்னியுமன்று கதிரோன்மறைந்திரவிற்
றன்னுடையதோழி தன்னுடனேமடத்திற் 1349

வந்திந்தமாதரசி மன்னவனைக்காணாமற்
கந்தரமன்னனுமுறக் காரிகையாளங்கிறந்தாள் 1350
சென்றரசன்சேயுந் திரும்பியவ்வூரில்வந்து
ஒன்றம்மடத்தி லவனுமுயிரைவிட்டு 1351
இருவருமங்கே யிருந்தாரலகையதாய்த்
திருவாருமவ்வையுமே சென்றதிலேதான்படுத்தாள்
நின்றுளொனும்பேய் மிரட்டவதைப்பார்த்துச்
சொன்னாளிருவரும்போய்ச் சோழதேசந்தனிலே
யிறகுதலையனிடம் வேந்தன்மகன்பிறப்பான்
உறையூராசனிட முற்றிருக்குறிகளில 1354
மரகதவல்லியிடம் மாதேபிறந்திடுவாய்
யிரதமுடனீ விவாகமதேயில்லாமல் 1355
இருப்பாய்வயதோ ரிருபத்தைந்தாகும்வரை
விரும்பாதவிந்த விறகுதலையனுக்கு 1356
மதுரைச்சங்கத்தாரில் மன்னுநக்கீரர்வந்து
மதுரமொழியாய் மணஞ்செய்வாருந்தனுக்கு 1357
எனவேமுன்னவ்வை யிவர்க்குவரமளித்தாள்
வனஞ்சேரிவர்தம் வரலாறெனவேதான் 1358
கற்பூரசுந்தரன்றன் காருண்யம்பெற்றோங்கும்
நக்கீரர்தானுரைக்க ராசனதிசயித்தான் 1359
ஆகையினாற்றனந்த அவ்வைமொழிப்படியே
வாகைசேர்மன்னு மணமிவர்க்குத்தானடத்தும் 1360
நாளேயிருந்திங்கு நல்லவிவாகமதைத்
தேனார்மொழியாட்குச் செய்வேனெனவுரைத்து 1361
ஆண்டிற்சுபகிருதி லானியுத்தராயணத்தில்
வேண்டுந்தனுசிலக்னம் மிக்கபுதவாரமதில் 1362

தேதிபன்னிரண்டிற் றிருமங்கலஞ்சூட்ட
மாதுமரகத வல்லியுடன்றானுரைத்தார் 1363
கல்யாணத்திற்காகும் காரியமெலா முடிக்க
மல்லார்புயத்தரசன் மந்திரிக்குத்தானுரைத்து 1364
விறகுதலையனுக்கு வேண்டும்வஸ்திராபரணம்
உறையூராச னுரைத்தான்கொடுங்கவென்று 1365
சோடித்தவனுக்கிருந்த துக்கமதைத்தான்மாற்றி
தேடக்கிடையாத செல்வியதனையேபார்த்து 1366
முன்பவத்தாலே முடிந்ததிவ்வண்ணமதாய்த்
தன்சமர்த்தாலே தணிதனிலேவாழுந்தோர் 1367
இல்லையெனவே யிறைவன்மகட்குரைத்துச்
செல்லாருங்கூடந்தற் றிருவேகவலையற்று 1368
இருப்பாயெனவேநல் லேந்திழையைத்தான்தேற்றத்
தருப்போற்குடையான் றனக்குநிகரில்லாதான் 1369
தானைகர்னன்னாருஞ் சகத்திற்கனுகூலன்
மானபரன்கண்ட மாணிக்கத்திலேவசிக்கும் 1370
நாராயணன்றன்னை நம்புங்கவிவாணர்
தீராவினைவிலகுஞ் செய்கைபோலேமனதில் 1371
உள்ளகவலை யொழிந்துசந்தோடமதாய்த்
தெள்ளமுதின்மொழியாள் தேர்ந்தாள்காணம்மானை
கொத்தன்றனையழைத்துக் கூறுவான்மந்திரியுஞ்
சித்திரமாய்க்கொட்டகையைச் சிங்காரியுமெனவே
நிலையின்கண்ணாடிகளை நிற்கவேதானமைத்து
விலக்கடங்காப்படங்கள் மேலேநெருங்கவைத்து
வெட்டிவேர்த்தட்டிகட்டி விட்டார்மருங்குதொறும்
நெட்டிப்பதுமை நிறுத்தினார்தம்பமெலாம் 1375

வித்தாரமாக விளங்குங்குருணுத்தகட்டிற்
கத்தரித்தபூவைமேற் கட்டியதனிலொட்டி 1376

அருமைமதிபெண்ணாட் கமைந்ததொருகொட்டகையிற்
கரும்புகமுகு கதலிகருப்பையிளநீர் 1377

மாவிலைமாலைகெட்டி மாலையெங்குமேநிறைத்தார்
ஆவின்பாலன்னமொழி யாயிழையாள்தான்மகிழ

இருளைவிலக்கு மிரவியெனவேயொளிசெய்
பெருமையுளலஸ்தர் பிரகாசமாயொளிர 1379

காந்தவிளக்கிருளைக் காணாமலேவிரட்டச்
சாந்தமுளவமைச்சன் றானுமக்கொட்டகையிற் 1380

றாண்டாவிளக்கிதங் தூண்டாச்செடிவிளக்கு
வேண்டுஞ்சதுர்விளக்கு மின்னார்சரவிளக்கு 1381

வால்சேட்டுடன்மெழுகு வத்திகளெங்கும்சொலிக்க
நால்பட் டுபெங்காமுன் றாறதிலேதானமைத்தான்

காவணத்தில்ரத்னக் கம்பளங்களும்விரித்துப்
பூவலயத்திலிதைப் போலெங்குமில்லையெனச் 1383

சிங்காரித்தேயமைச்சன் செப்பினன்மன்னனுக்கு
அங்குபெண்மாப்பிள்ளையை யவ்வரசன்றானழைக்க

நவனமுளராச காரியஸ்தரானவரிற்
சிவனைமறவாச் செனுச்சினுநாவனு 1385

நாராயணன்றவத்தி னாலேயுதித்தகதன்
மாரன்னிராமநாத மன்னவனைத்தானோக்கி 1386

ஆக்குநகைக ளனைத்தும்பெண்மாப்பிள்ளைக்கு
சீக்கிரமாய்க்கொடுக்கச் செப்புமெனவுரைத்தார் 1387

கண்டமினார்நெஞ்சைக் கவருமழகுடையான்
தண்டாயுதபாணி தாளையுமேதான்மறவான் 1388

கொண்டலெனவே கொடுக்குங்கொடையாளன்
வண்டமிழோர் தங்கலியை மாற்றுங்கருணைவள்ளல்
தோடவிழுமாலைக் கருணாகுணசெம்பீரன்
சேட்டையுந்தமிழ்த் தேர்ச்சியுடனேயெய்திப்போக
வங்காளஞ்சிங்களத்து மன்னர்மதிக்கும்பூதி
எங்கோனிராமனைமீள வீன்றதவப்புதல்வன் 1391

இராமநாதன்றனை யெங்கோனுபரவாதான்
தாரதரங்கள்தானெறிந்து தானுதவும்நாகரத்னஞ்
செட்டியார்முற்றவத்தாற் சேயாய்ச்செகத்துதித்தோன்
மட்டிலாமன்னர் மதிக்கும்வயிரவனே 1393
கொடுமென்றுத்தாரங் கொடுத்தான்ராமநாதன்
வடுவிலாமன்னன் வயிரவன்றன்கொடுத்த 1394
காலாழிபீலியுடன் கைமோதிரஞ்சிலம்பு
பாலார்மொழியாட்குப் பாசிபந்துபங்கிவளை 1395
மூக்குத்திநத்தோலை மூன்றும்பிறையுடனே
வாக்கிலுயர்வான மங்கைமனந்தான்மகிழ 1396
தலையலங்காரந் தலைநாகமும்புலாக்கு
விலையில்சடைக்குச்சு மின்னேரிடையணியும் 1397
வில்லையொடுமின்னூல் விளங்குசந்திராரமுடன்
செல்வமிகும்பெண்ணாட்குத் தேவையுளநன்னகைகள்
மயிர்மாட்டிகன்னரசம் மாமணிசேர்கோவையுடன்
அயில்போல்விழியாளுக் கட்டியலிராக்கடியும் 1399
பாவையர்கள்நாயகிக்குப் பஞ்சகலசப்பூடி
தேவையுளாட்குச் சிமிக்கிவயிரவளை 1400
நெத்திச்சுட்டிசுத்துச்சரம் நித்திலப்பதக்கமுடன்
பொத்தான்சரம்மகிழம் பூவின்சரப்பளியும் 1401

நவைகண்டிபாட்லாக்கு நல்லபவுன்மாலை
இவைகளெல்லாம்பெண்ணரசிக்கிட்டார்கள்தாதியர்கள்
சேலத்துப்பட்டுவஸ்திரங்தேன்மொழியாள்நாயகற்குத்
தால்த்துப்கிட்டாத சரிகைத்துப்பட்டாவும் 1403
சாதராசால்வைரத்னத் தாலேதலைப்பாகை
பாதந்தனக்குப் பஞ்ரிகுநற்சோடிரண்டு 1404
பத்துவிரலுக்கும் பதித்தமணிமோதிரமும் [ண்
சுத்துங்கொடியிடைக்குச் சுத்தவேபொன்னரைஞ்ஞா
கண்டசரம்ரத்னக் கடுக்கனுடன்முருகு
வண்டமிழோருக்குதவும் மால்ராமசாமிமுகில் 1406
மன்னன்கொடுத்தநகை மாப்பிளைக்குத்தான்றரித்து
மின்னேரிடையாள் விவாகமதற்காக 1407
மாவிலையுந்தருப்பை மஞ்சளுடன்குங்குமமும்
ஆவின்நெய்செந்நெ லரிசிபழந்தேங்காய் 1408
மங்கையர்கள்கொண்டுவந்து வைத்தார்மணவறையில்
திங்கள்வதனத்திருவைச் சேடியர்கள்தானழைத்து
பல்க்கத்தாப்பன்னீரால் காரிகையைநீராட்டிச்
சொல்லற்கரியகுழற் சுந்தரியைக்கூட்டிவந்து 1410
இராமநாதனவளுக் கிய்ந்தநகையைப்பூட்டி
நராதிபன்றன்புத்திரிக்கு நல்லதொருசண்பகமும்
மருவெட்டிவேர்மல்லிகை மட்டிப்பாலின்புகையுந்
திருவெட்டுறுமவட்குச் சேர்த்துக்குழலதனில் 1412
மதுக்கோட்டுறுமகிழ மாலைதனையணிந்து
புதுக்கோட்டைவில்லையிணைப் பூசினார்மங்கையர்க்கு
நெற்றிதனிற்றிருமண் ணேரிழையாட்கிட்டார்கள்
வெற்றிபெறுங்கணில்மை மெல்லிநல்லார்களிட்டார்

தளிரனையமேனித் தமிழறிவாடனையுங்
குளிர்மொழியார்கள்சூழ்ந்து கொண்டிருந்தார்களங்கு
பூமன்னிடத்திற் புரோகிதர்கள்வந்துசொன்னார்
நாமுன்னமைத்ததொருநாழிகையும்லக்கினமும் 1416
வந்ததுமன்னா வரவழையும்மாப்பிள்ளையைச்
சந்தோடமான சவரம்நலுங்கதனைச் 1417
செய்யநல்லவேளையெனச் செப்பினார்புரோகிதரும்
வையத்திறைமகிழ்ந்து மாப்பிள்ளையயங்கழைத்து
வாருமெனக்கூட்டி வந்தாரரசனிடம்
பூருவத்திலேயிவன்செய்புண்ணியத்தினாலரசன் 1419
மாதுதனக்கிந்நாள் மாப்பிள்ளையுமானவர்க்குச்
சாதுரியமாகச் சவரமதுசெய்துவைத்துத் 1420
தாமமணிவோன்ராம சாமிகொடுத்தநகை
சேமமுள்ளானுடம்பிற் சேர்த்துமணவரைக்குக் 1421
கூட்டிவந்தார்கள்சுபங் கூடுநல்லவேளைதனில்
தோட்டிதழ்ப்பூமாலை சோடிகழுத்திலிட்டார் 1422
உறன்முறையார்பட்டணத்தி லுள்ளமனிதரெல்லாங்
குறைவறவேவந்து கூடினார்கொட்டகையில் 1423
ஓதரியமாப்பிள்ளையை யோங்குமணைமீதில்வைத்துப
பேதைதமிழறியும் பெண்மயிலைத்தானழைத்து 1424
வரும்படியுத்தரவு மன்னன்கொடுத்தபின்பு
குரும்பைமுலைமாதர் கூட்டிவந்தார்கள்பெண்ணை
பாலைநிகர்மொழிமின் பாவைகழுத்தினிற்பூ
மாலைதனைப்போட்டு மணவறையிலேயிருத்தி 1426
தந்திமுகவனுக்குச் சாம்பிராணித்தூபமிட்டுச்
சிந்தைமகிழ்வாகத் தேங்காய்பழமுடனே 1427

தாம்பூலதெட்சணையுந் தான்வைத்துப்பூசைசெய்து
வாம்பரியைத்தானடத்தும் மன்னவன்றனுத்தரவால்
கன்னிகைக்கும்மாப்பிள்ளைக்குங் கட்டினார்காப்பதனைச்
சின்னவிடையாட்குச் செயமங்களம்பாடி 1429
கலுங்கிட்டிருவருக்கும் நாரியர்கள்தாங்கூடித் [ள்
தெலுங்கிற்பண்ணோடவர்க்குச்செப்பினார்சோபனங்க
வைத்தமுகூர்த்தம் வழுவாதவ்வேளைதனிற்
புத்தியுள்ளாளுக்குப் பூட்டினான்மங்கிலியம் 1431
திடமாகுங்கொம்பிருந்த தேலின்மேலிச்சையுற்ற
முடவனிடங்கொம்பு முறிந்துவிழுந்ததுபோல் 1432
ஏதுமறியாத வேழையொருவனுக்குப்
புதையற்கிடைத்துமனம் பூரித்ததுபோலும் 1433
அகிலமதில்நெடுநா ளாகத்தவமிருந்த
பகீரதன்கங்கைதனைப் பாரிலழைத்ததுபோல் 1434
சிந்தைதனிலீகை சிறிதுமிலாதவனுக்
கிந்திரன்பட்ட மிடையிற்கிடைத்ததுபோல் 1435
அந்தமிலாரூப மமைந்தவொருவனுக்கு
வந்தரம்பைமின்னாள் மனையாட்டியானதுபோல் 1436
மண்ணிற்சிசுவாய் வரும்போதிலேயிரண்டு
கண்ணிலானுக்கொளிசேர் கண்கள்கிடைத்ததுபோல்
ஊழிற்பெரியவலி யாவுளமற்றொன்றுமந்தச்
சூழ்வினைதான்முந் துறுமென்றுவள்ளுவனார் 1438
முன்னூலிற்சொன்ன முறையின்படியேயிப்
பன்னூல்மொழியாட்குப் பர்த்தாவானானெனவே
சேஷையிறைத்தார் திருமங்கிலியரெலாம்
பாஷைபதினெட்டும் படித்தபசுங்கிளிக்கும் 1440

மெல்லிதனக்கேய்ந்த விறகுதலையனுக்கும்
முல்லைநகையாள் முகூர்த்தமணவறையில் 1441
சாந்தநலுங்கிட்டார் தையலர்கள்தான்சுபமாய்
வேந்தனுமங்கிருந்து வெற்றிலைபாக்கையீய்ந்து 1442
வந்தோர்மகிழ மரியாதைசெய்தரசன்
கந்தமலிமாப்பிள்ளைதன் கையுடன்பெண்கைகோர்த்து
அரண்மனைவீட்டிற் கனுப்பியிருவரையும்
உரிமையுடனே யுபசாரஞ்செய்தரசன் 1444
சட்டரசவர்க்கமுடன் சம்பாவனைம்படைத்து
திட்டமுளபன்னீர் தெச்சையளித்திறையும் 1445
வேதபாராயணஞ்செய் வேதியர்கள்தங்களுக்குக்
கோதானம்பூதானங் கோடிவத்ரதானமுடன் 1446
செய்தரசன்றன்முடித்துச் செய்யுஞ்சடங்கதனை
வையகத்தோரும்மகிழ வைத்தன்றிரவதனில் 1447
கானவித்தைக்கேற்ற கனவான்களையழைத்துத்
தானவ்வித்தைகேட்டுச் சந்தோஷமாயரசன் 1448
நாகவல்லியெல்லாம் நடத்திமுடிந்ததின்பின்
ஏகமதாயங் கிருவர்களுந்தான்சுகமாய்ப் 1449
மாப்பிள்ளையைவிட்டு வடிவுபிரிந்தாலும்
வேப்பிலையைத்தான்கசப்பு விட்டுப்பிரிந்தாலும் 1450
சந்திரனையுங்களங்கந் தான்விட்டகன்றாலுஞ்
செந்திருமால்சீராப் பதியைவிட்டுச்சென்றாலும் 1451
சக்கரையைவிட்டினிப்புத் தானேபிரிந்தாலும்
அக்கினியைச்சூ டகன்றுபிரிந்தாலும் 1452
சத்தியமுந்தவசி தன்னைப்பிரிந்தாலும்
பத்மினியாள்தன் பதியைப்பிரிந்தாலும் 1453

விந்தைசரஸ்வதியை விட்டுப்பிரிந்தாலுஞ்
சத்தியிடப்பாகந் தனைவிட் டகன்றாலும் 1454
தேவிகமலாசனியைச் செல்வம்பிரிந்தாலுந்
தாவுகடல்நீரையும் தான்விட் டகன்றாலும் 1455
பூமன்நாராயணவேள் புத்திரராய்வந்துதித்த
நாமமணியுமிராம சாமிவயிரவனும் 1456
தேகம்ரண்டுசிவனென்றாய்ச் சேர்ந்துமணமலராய்க்
கமனதா யிருப்பதுபோலேபுவியிற் 1457
பல்லாண்டாய்வாழ்ந்துபுத்ர பாக்கியமுந்தான்பெறுவீர்
வில்லார்புருவமுள்ளா மின்னேயெனவேந்தன் 1458
வாழ்த்திஞன்கிரரங்கு வந்தாரவர்காலிற்
றாழ்த்திமுடியைச் சரணமிகச்செய்தார்கள் 1459
ஊருமுறையூரே யொண்டியாங்கன்னிகைநின்
பேருந்தமிழறிவாள் பேதாய்பிரியமுடன் 1460
உனைவிரும்புவானே யுன்தெய்வமாகவெண்ணி
மனையிடத்துப்போயிருந்து வாழுமெனவுரைத்து
ஆசிர்வாதஞ்செய் தனுப்பினார்மன்னவனுந்
தேசிரதம்யானை சேலைரவிக்கைநகை 1462
மாசில்லாளுக்கு வரிசைபலவேகொடுத்துப்
பேசுங்கிளியன்ன பெண்ணாள்தன்மாப்பிள்ளைக்கு 1463
வஸ்திரங்களாபரணம் மன்னவனுந்தான்வழங்கி
விஸ்தாரமாயோங்கும் மெல்லிநன்னாள்தன்மனைக்கு
அனுப்பவரிமுகப்பல் லாக்கதனையேயரசன்
இனித்தாமதமில்லா திங்குவரவேண்டுமென்றான்
போகிகள்கொண்டுவந்தார் போர்வேந்தன்முன்பாகப்
பாகினியமொழியாள் பல்லக்கிலேறிவர 1466

மாவின் மீதேறி மாப்பிளையும் முன்னடக்க
ஆலவட்டத்தானங் கடப்பமுஞ்சிலர்கொடுக்க 1467
இயொட்டிசாமரங்க ளெங்குமேசூழ்ந்துவர
மையொட்டுங்கண்ணார் மயில்விசிறிதான்வீச 1468
தானுபதிகளிரு சார்பும்நெருங்கிவர
மீனுகூடியாள்முன் விருதுபலசூழ்ந்துவர 1469
மங்களவாத்தியங்கள் வாரிதிபோலேமுழங்கச்
சங்கையிலாதபடி தானைபலவேநெருங்க 1470
வண்டமிழையறியும் மங்கைபோல்வின்னுலகில்
உண்டோபெண்ணென்றே ஒட்டகமண்ணூர்ந்துவர
கல்விமழைபொழியுங் கன்னிசிவிகைமுன்னே
வல்லமதமழையை வாரணங்கள்பெய்துவர 1472
பட்டுக்குடைநெருங்கப் பாவாடைவீசிவர
வட்டமதிமுகத்தார் மங்களங்கள்பாடிவர 1473
வாசப்பன்னீரால் மருங்கெலாஞ்சேறுகத்
தேசுடையாள்முன் செயபேரிதான்முழங்க 1474
கருங்குவளைக்கண்ணமைந்த கன்னியுடன்காளையர்கள்
நெருங்கக்கலனறுந்து நீள்வீதிகள்நிறையுஞ் 1475
சிந்துமதம்பன்னீரால் சேறுயினநெறியுஞ்
செந்திருவன்னாரின் றேசிமிதித்துகளால் 1476
அடங்கவதனு லறிவார்வழியதனை
இடங்கொடுறும்பொன்னை யிறைப்பார்குடத்தில்வைத்து
மைந்தரொலியுடனே மங்கையர்கள்தன்னொலியுஞ்
சிந்தினொலிபோற் செவியதனைத்தான்மூட 1478
நமக்குவந்தபோகமின்று நாம்செய்தவமெனவே
சுமக்கும்விறகுதலைத் தோன்றல்மனமகிழ்ந்து 1479

போகும்போதங்கரின் பொற்கொடிகள்தான்குழ்ந்து
வாகமாயிவ்வுலகி லெத்தனையோவரசர் 1480
அன்னையவாளைந் தான்செய்திவன்றனக்குக்
கன்னிகிடைத்ததென்ன காரணமேதென்பாரும் 1481
காலமெல்லாம்விருக் கட்டதனையேயெடுத்தான்
ஞாலத்திலேநல்ல ராசாங்கயோகமது 1482
வந்ததெனவே வழுத்துவார்கள்சிலபேர்
நந்தாமதுரைநகர் நக்கீரதேவரினால் 1483
யோகம்பிறந்ததென வோதுவார்கள்சிலபேர்
நாகிளமங்கைக்கிவனும் நாயகனோவென்பாரும் 1484
அல்லவடிமுன் னடித்துத்துறத்திவிட்ட
செல்லமகளிவனைச் சேர்வாளோவென்பாரும் 1485
பூவாழரசனுக்குப் புத்தியுந்தானில்லாமற்
கேவலனுக்கீய்ந்து கெடுத்தான்காணென்பாரும் 1486
இவளுக்கிணையாக வில்லாதமாப்பிளைக்குக்
கவனிக்காமற்கொடுத்த காரணமேதென்பாரும் 1487
தெங்கணன்வாசிப்புத் தெரியாதிவன்றனக்குப்
பங்கமிலாமதுரைப் பட்டணத்தானொருவன் 1488
வந்துசெயித்திந்த மாப்பிளைக்குத்தான்கொடுத்தான்
சுந்தரியையென்றங்கு சொல்வார்சிலபேர்கள் 1489
செயித்தவன்கல்யாணஞ் செய்துகொள்ளாமலிந்தப்
பயித்தியனுக்கேன்கொடுத்தான் பாவியவனென்பாரும்
இட்டதிருக்க வினியாசைப்பட்டதினாற்
கிட்டுமோயிந்தக் கிளிமொழியாட்கென்பாரும் 1491
கிளிவளர்த்துப்பூனைதனக் கேயிரையாய்யீய்ந்ததுபோல்
அளிவிழியாளை யரசன்கொடுத்ததென்பார் 1492

கல்விதனிற்செயித்த காவலருக்கென்னையுமே
செல்விகொடுமெனமுன் செப்பினள்தன்னகத்தால்
வாய்க்கொழுப்புச்சீலையால் வடிந்தகதைபோல
வாய்த்தாளிவளுக்கு மாப்பிள்ளைதானென்பாரும் 1494
இருந்தையுடன்பவள மேகமாயோரிடத்தில்
இருந்தாலுநன்றா யிருக்குமோவென்பாரும் 1495
வெங்கதிரைராகு விழுங்கியபோதேவுலகம்
எங்குமிருளா யிருப்பதுபோலேயிவன்றன் 1496
கங்குல்நிகர்மேனிக் கறுப்பாலிப்பெண்ணழகும்
மங்குமெனவே வழுத்துவார்கள்சிலபேர் 1497
முன்னம்முடவனிடம் மொய்குழல்நளாயினியும்
அன்னவன்சொல்மீறா தவன்கற்பைக்காக்கலையோ
காந்தாரிகண்தெரியாக் காளையிடமேயிருந்து
பூந்தாறுங்கோதை போக்கலையோதன்பொழுதை
இருந்தாள்விவாகமிவ ளில்லாதிதுவரையும்
அருந்ததிநேர்பெண்ணுக் கமைத்தவிதியிதுவோ
கரும்பிற்குரியான் கறுப்பனல்லாற்சிகப்போ
விரும்புதுளவத்தண்ணல் மேனிகறுப்பலவோ 1501
என்றிவ்விதம்பேசி யேகினாரங்கரோர்
மன்றலமர்கூந்தல் வல்லியுந்தன்மாப்பிள்ளையும் 1502
மொய்குழலாளன்று முன்வாழ்ந்தநல்மனைக்கு
வையத்திறைகொடுத்த வாம்பரியுடன்சேர்ந்து 1503
தானைபலவுக்குந் தமிழறியும்பெருமாள்
ஆனபரிசாரகரா லாக்கினபல்வர்க்கமதை 1504
வந்தவரெல்லாம் மகிழ்ந்தமுதுசெய்தபின்பு
சந்தனதாம்பூலந் தான்கொடுத்தெல்லோர்க்கும் 1505

மரியாதைசெய்துகதிர் மங்குமிரவதனிற்
றெரிவைதனக்காகச் சிங்காரமாய்ப்படுக்கை 1506
அமைத்தயிடத்தணங்கன்னாள் மனமகிழு
சுமங்குவிறருதலைத் தோன்றல்தனக்காகப் 1507
பூந்திபாற்கோவா பொருந்துஞ்சிலேப்பிலட்டு
மாந்தளிர்மேனியுள மாதராங்குவைத்தார்கள் 1508
சவ்வாதுடன்புனுகு தான்கலந்தசாந்தமதைக்
கொவ்வையிதழார்கள் கொண்டுவந்துமாப்பிளைக்குட்
பூசிப்படுக்குமறை போகும்படியுரைத்தார்
மாசிலாப்புத்திமிகும் மன்னவனும்மஞ்சமதிற் 1510
போயிருந்தேதனது புத்திதனிலேநினைப்பான்
நாயகியைக்கூட நமக்குவந்ததேயோகம் 1511
எனவேதன்னெஞ்சினுள் வில்லாமகிழ்வோடு
தனகனவான்போலத் தானிருந்தான்மஞ்சமதிற் 1512
தேன்பாலகனியைச் செயித்தமொழியணங்கு
தான்பார்த்துமிழ்ந்த தலைவன்றனைப்பார்க்க 1513
முற்பிறப்பின்றொட்டுப் பூண்டதிவ்வண்ணமென
நற்கீரர்சொன்னதொரு ஞாயமதைத்தானினைந்து
கட்டழகியாள்முன்னங் கஞ்சமலரோனெழுதி
விட்டபடியல்லால் வேறுபடவாதெனவே 1515
சிந்தைதனைத்தேற்றிச் சேயிழைமஞ்சத்தருகில்
வந்தங்கிருந்ததொரு மாப்பிளையைத்தான்பார்த்தாள்
உருவுமுயர்குலமு மோங்குந்திருமடந்தை
வரும்போதுகூட வருமென்றதற்கிணங்க 1517
கடைத்தெருவில்முன்னவனைக் கண்டபடியில்லாமல்
மடக்கொடியாள்கண்ணில் மறுரூபமாய்த்தோன்ற

நமக்குமதனிவனே நாமேரதியெனவே
சுமக்கும்விறகுதலைச் சுந்தரனோடேமகிழ்வாய்க் 1519
காமன்ரதியும் கலந்தணைந்தபாவனைபோல்
சோமனுடன்ரோகிணிபோல் சுந்தரனைத்தான்கூட
வாழ்ந்துசுகித்தாள்நல் மங்கையுடனிந்தனத்தான்
ஆழ்ந்தமதியுள்ள வரசனிடத்திருந்து 1521
அற்புதஞ்செதன்மதுரை யாண்டவனுக்கான
நற்கீரதேவரிடம் ராசன்மிகமகிழ்வாய் 1522
வேண்டியதெல்லாம் மிகவேவழங்கியந்தப்
பாண்டியனூருக்குப் பார்வேந்தனுப்பிவைத்தான்
நாடுபுகழ்கல்விமிகு நற்கீரதேவரங்கு
பீடுயர்சோழனிடம் பெற்றமரியாதையுடன் 1524
தண்டிகையிலேறிச் சகலவிருதுஞ்சூழ்ந்து
வண்டமிழ்சங்கஞ்சேர் மதுரைநகர்க்கேவரவே 1525
சென்றுதமிழறியுஞ் சேயிழையைத்தான்செயித்து
இன்றுந்தநற்கீர ரிங்குவந்தாரெனவே 1526
தூதுவர்களோடிவந்து சொன்னார்களிராசனிடம்
மேதினியோர்போற்றும் விறல்வேந்தனப்போது
சதுரங்கசேனையுடன் முன்சென்றெதிராக
மதுரமுடன்கவிசொல் மன்னன்றனையழைத்து 1528
வந்தந்நகரை வலஞ்செய்துவைத்துமன்னன்
சந்தோடந்தானுகிச் சங்கத்தலைவரெலாம் 1529
இவடத்திலேயிருந்தங் கேகியவளைச்செயித்த
கவடமதைக்கேட்டுக் களித்தார்களம்மானை 1530
வல்லிவிறகுதலை மன்னனுடன்கூடி
அல்லும்பகலு மணுவளவும்பிரியாமல் 1531

சீவனென்றுகூடிரண்டாய்ச் சேர்ந்தன்றிப்பேடதுபோல்
ஆவலாய்ச்சேர்ந்துங் கனுபவித்தாரம்மானை 1532
மாதமும்மாரி வழங்கப்பயிரோங்க
நீதியுடன்செங்கோல் நெறிதவராதபடி. 1533
தேசுடையமன்னவர்கள் செங்கோல்செலுத்திவர
மாசில்லாவேள்வி மகங்கள்தழைத்தோங்க 1534
பொங்குகடல்சூழ் புவனமதிலிந்திரனோர்
சிங்கமாமன்னுதன் செங்கோல்செய்நாடதுபோல்
கன்னல்செந்நெல்வாழை கமுகுதென்னைநெருங்க
மன்னரெல்லாம்படிந்து வந்துதிறையளக்கும் 1536
சோமனிகர்வதனச் சோழன்செங்கோல்வாழி
தாமமணியிந்தனத்தான் றானும்மிகவாழி 1537
தாதுறையுங்கூந்தற் றமிழறிவாடான்வாழி
போதுறையுமிந்திரையாள் பூங்கமலத்தாள்வாழி 1538
காவளரும்மாநதிசூழ் கண்டமாணிக்கமுறும்
பூவளரும்மார்பன் புகழ்சேர்நாராயணவேள் 1539
மக்களுடன்சுற்றம் வளர்நீதியெலாம்வாழி
தக்கபுகழுற்றோன் தருமநெறிதான்தவரா 1540
பாமன்னுநாவான் படியிலுபகாரி
காமனிலுமழகன் கர்ணனிலும்மேற்கொடையான்
பூவிலுயர்வோன் புகழ்சேர்சுகுமாரன்
நாவலவர்கொண்டாடும் ராமநாதன்வாழி 1542
பூவுலகிலுள்ள புலவர்களெல்லாம்வாழி
தாவுகடற்பூவிற் றனக்குநிகரில்லாதான் 1543
மங்களஞ்சேருப்பனசை மாநகரில்வாழ்வோன்
செய்கமலமாதுகுடி சேரும்புயத்தழகன் 1544

மருவலர்சிம்மேறு வழங்குங் கொடைக்காத்தான்
முருகுறுநற்றாரான் மூதறிவிலேசிறந்தோன் 1545

மூவுலகும்பேரோங்கும் முத்துராமன்வாழி
நாவலர்கணாவிலுறை நாமகளுந்தான்வாழி 1546

கன்னல்மொழியின்னார் கண்டுமடைழுராமன்
கன்னல்வயிரவ னெக்காலுமிகவாழி 1547

நாடுபுகழ்ராம நாதன்றனக்கினைய
தேடுகல்விமான்சின்னன் செட்டியார்தான்வாழி 1548

மந்தரமன்னபுயன் மால்வேந்தருக்கினிய
சுந்தரன்கந்தஸ்வாமி தொல்லுலகிலேவாழி 1549

கந்தரமும்கற்பகமும் கஞ்சமலராள்நாண
தந்துதவும்லட்சுமணன் தரணியிலேவாழி 1550

தென்னன்வயிரவனுஞ் செட்டியாருக்கினைய
மன்னனுலகநாதன் மாநிலத்திலேவாழி 1551

பயந்தனையொட்டாதுசெய்யும் பால்வண்ணனைமறவாச்
சவுந்தரபாண்டியன்றன் சந்ததியெலாம்வாழி 1552

எங்கோன்ராமநாத னிஷ்டர்களெலாம்வாழி
மங்களமாய்க்கேட்போர் வாசிப்பவர்வாழி. 1553

தமிழறியும்பெருமாளம்மானை

முற்றிற்று.

---